


துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 152-50 TM

# பொருள் அடக்கம்

கல்கி

மலர் 11 | இதழ் 11 — 1951 அக்டோபர் 14 — கர ௵ புரட்டாசி 28உ



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## அட்டைப்பட விளக்கம்

"மங்கையராகப் பிறப்பதற்கே — நல்ல
மாதவம் செய்திட வேண்டும் அம்மா!"
—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

ஆண் குலத்துக்கு ஆக்கம் அளிப்பவள் பெண்; மனிதகுலத்தை மாண்புறச் செய்பவள் பெண். மலருக்கு மணம் இன்றியமையாதது; மனைக்கு மனைத் தலைவி இன்றியமையாதவள்.

வண்ண ஓவியங்களினாலும் சிற்ப சித்திரங்களினாலும் ஒரு மாளிகையை எவ்வளவு அழகாக அலங்கரித்தாலும், அந்த மாளிகைக்குரிய மங்கை நல்லாள் இல்லையென்றால் அந்த அலங்காரம் முற்றுப் பெறாது. 'இல்லாள் அகத்திருக்க இல்லாதது ஒன்றில்லை' அல்லவா?

நாட்டைப் பற்றியும் நாட்டு மக்களைப் பற்றியும் பாடிய மகா கவி பாரதியார், நாட்டுக்கு உரிய புதுமைப் பெண்ணைப் பற்றியும் பாடியிருக்கிறார். அந்தப் புதுமைப் பெண்தான் இந்த வாரத்துக் "கல்கி" இதழ் அட்டையை அலங்கரிக்கிறாள்.



# பயர்ஸ்டோன் டயரின் அமைப்பு






## வேலைத் திறனின் உயர்தர ரகம்

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக உயர்ரக டயர்களை உற்பத்தி செய்வதினால் ஏற்பட்டுள்ள முதிர்ந்த அனுபவமே அதிககாலம் உறுதியுடன் நீடித்து திறமையாக உழைக்குமென்பதற்கு உத்திரவாதமாகின்றது. பயர்ஸ்டோன் டயர்களை உற்பத்தி செய்பவர்கள் பல ஆண்டுகள் முதிர்ந்த அனுபவத்துடன் தம் தம் வேலையில் சிறந்த நிபுணர்கள். மறுமுறை நீங்கள் ஒரு பயர்ஸ்டோன் ஹை ஸ்பீட் ஹெவி டியூட்டி டயரில் பிரக்யாதி வாய்ந்த டிரெட் டிஸைனைக் காணும் சமயம், அதன் உற்பத்தியில் உள்ள உயர்ந்த வேலைப்பாட்டையும், திறனையும் ஞாபகப்படுத்திக் கொண்டு முழு நம்பிக்கையுடன் அதை வாங்குங்கள்.

**அதிக மைல்கள், சுகம், நாகரீகப் பாங்கு, பணத்திற்குறிய மதிப்பு ஆகிய பயன்களை பயர்ஸ்டோன் டயர்கள் வாங்கும்போது நீங்கள் அடைகிறீர்கள்.**



**Firestone**

"கம் டிப்டு டயர் இது ஒன்றே"

LAS. (B)

கல்கி

மலர் 11 } தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 11

# பூதத்துக்கு வழி என்ன?

பிராங்கின்ஸ்டின் என்பவர் தம்முடைய விஞ்ஞான மேதையினால் ஒரு மனிதரைச் சிருஷ்டித்தார். ஆனால் அந்தச் சிருஷ்டி பயங்கரமான பூதமாகி அவருக்கும் மற்றெல்லோருக்கும் ஆபத்தாக முடியும் என்று அவர் கனவிலும் கருதவில்லை. பின்னர், அரும்பாடுபட்டுச் சிருஷ்டித்த அந்தப் பூதத்தை அழிக்கும் வழி என்ன என்பதைக் கண்டுபிடிப்பது மகா கஷ்டமாகி விட்டது!

இரண்டாவது உலக மகா யுத்தத்தைச் சீக்கிரமாக முடிக்க வேண்டும், அதனால் ஏற்படும் அழிவையும் உயிர்ச் சேதத்தையும் சிறிதும் தாமதமின்றி நிறுத்த வேண்டும் என்பதற்காகவே அணுகுண்டுகளைச் சிருஷ்டித்ததாகவும், அவற்றை ஜப்பானிய நகரங்கள்மீது பொழிந்ததாயும் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் அடிக்கடி கூறியது உண்டு.

அந்த ராக்ஷத சிருஷ்டியினால் இப்போது அமெரிக்கா உள்பட அகில உலகத்துக்குமே ஆபத்து ஏற்படுமோ என்ற நிலைமை உண்டாகியிருக்கிறது.

அணுகுண்டுகளைக் குவியல் குவியலாக அமெரிக்கா உற்பத்தி செய்து வருவதாய் அமெரிக்கத் தலைவர்கள் பெருமையடித்துக் கொண்டார்கள்.

கொரியா யுத்தத்தில் அணுகுண்டு பிரயோகிக்கலாம் என்றுகூட ட்ருமன் உள்படச் சில அமெரிக்கப் பிரமுகர்கள் சொன்னார்கள்

இதுவரையில் சிருஷ்டிக்கப்பட்டுள்ள அணுகுண்டுகளை என்ன செய்வது? யார் தலையில் கொண்டுபோய்ப் போடுவது? கடலில் ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் கொண்டுபோய் அவற்றைக் கொட்டினால்கூட அலைகளால் மனிதவர்க்கத்துக்கு ஆபத்து ஏற்படாமல் இருக்குமா?—இவை போன்ற கேள்விகள் விஞ்ஞான நிபுணர்களைத் திணற அடித்து வருகின்றன.

இந்நிலைமையில் சில தினங்களுக்கு முன் வெளியான செய்தி, பொதுவாக உலக நாடுகளையும் குறிப்பாக அமெரிக்காவையும் திடுக்கிடும்படி செய்திருக்கிறது.

பல மாதங்களுக்கு முன் ருஷ்யா எங்கேயோ ஓர் அணுகுண்டைப் போட்டுப் பரிசோதனை நடத்தியதாக அமெரிக்க நிபுணர்கள் கண்டுபிடித்துக் கூறினார்கள்.

ஆனால் ருஷ்ய சர்க்கார் அந்தச் செய்தியை ஒத்துக் கொள்ளவில்லை.

ஆக்கத் திட்டங்களுக்காக மலைகள் உடைக்கப்படுவதாயும், அந்தச் சத்தத்தையே அணுகுண்டு வெடித்த அமெரிக்க நிபுணர்கள் தவறாக நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்றும் ருஷ்யத் தலைவர்கள் சொல்லி மழுப்பி விட்டார்கள்.

எனினும் அணுகுண்டு உற்பத்தி இரகசியம் அமெரிக்காவின் ஏகபோக பாத்தியமானது அல்ல என்று ருஷ்யப் பிரமுகர்கள் அடிக்கடி கூறி வந்தனர்.

ருஷ்யாவுக்கு அணுகுண்டு இரகசியம் தெரிந்திருந்தாலும் அமெரிக்காவைப் போல் ருஷ்யா அணுகுண்டுகளைக் குவியல் குவியலாக உற்பத்தி செய்வதற்கு இன்னும் பல வருஷங்கள் செல்லும் என்று அமெரிக்கர்கள் ஆறுதல் அடைந்து வந்தனர்.

ஆனால் சென்ற வாரம் வெளியாகியுள்ள செய்திகள் அந்த ஆறுதலுக்கும் இனி வழி இராமற் செய்துவிட்டன.

ருஷ்யா சில தினங்களுக்கு முன் மற்றொரு அணுகுண்டை வீசிப் பரிசோதனை செய்து பார்த்ததாக ட்ருமன் கூறியுள்ளார்.

சென்ற தடவையைப்போல் இப்போது அந்தச் செய்தியை ருஷ்யா மறுக்கவில்லை. மறுக்காதது மாத்திரமல்ல, அது உண்மை என்றும் ஒத்துக் கொண்டிருக்கிறது!

உலக அரசியல் வாதிகளும், ராஜதந்திரிகளும் அனுஷ்டிக்க முடியாத மௌன விரதத்தைப் பெரிதும் அனுஷ்டித்து வரும் மார்ஷல் ஸ்டாலினே அச் செய்தி உண்மை என்று ஒத்துக் கொள்கிறார்.

# வோட்டு யாருக்கு?



① யானைகள் நேருஜிக்கே தாங்கள் வோட்டுகளைக் கொடுக்கும்...
"தேர்தலுக்குப் பிறகு எங்களை வெளிநாடு களுக்கு அனுப்பு வீர்கள் அல்லவா?"
வோட்
வோட்
②.. தவளைகள் தங்கள் வோட்டுகளைப் போட அசோக் மேத்தாவையே நாடிவரும்...
"நீங்கள் தான் எங்களுக்கு வழிகாட்டி."
③ வால்யிழந்த நரிகள் கிருபளானியையே தேர்ந்தெடுக்க விரும்பும்...
④ காக்கைகள் ஊர்ந்து மகாசபைத்தலைவர் காரேயுக்கு வோட்டுப் போடப்பறந்து செல்லும்...
"நாங்கள் சனியனை வாதனையாயிற்றே! உங்களை எப்படி மறக்க முடியும்?"



5 எலிகள் கம்யூனிஸ்ட் தோழர்களுக்கே வோட்டுக் கொடுக்கும்...
"எங்களுடன் பூமிக்கு அடியில் இத்தனை நாள் வாழ்ந்த உங்களை எவ்வாறு மறக்க முடியும்?"
6 வனமகோத்சவ நண்பர்கள் ஏமாந்து போவார்கள்...
7 வௌவால்கள் எல்லாம் இத்வாய்க்கே நிச்சயமாய் வோட்டுப் போடும்...
8 "இருட்டில்தான் எங்களுக்குக் கண் தெரியும். ஆகையால் எங்கள் வோட்டு உங்களுக்குத்தான்.."
இந்த ஜீவன்கள்தான் உண்மையில் புத்திசாலிகள். "தங்கள் வோட்டைத் தின்று உணவுப் பஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளும்"

ருஷ்யாவின் தற்காப்புத் திட்டத்துக்கு இணங்கப் பலவிதமான வெடிகுண்டுகளைப் பரிசோதனை செய்து பார்ப்பதாக ஸ்டாலின் சொல்லுகிறார்.

அமெரிக்கா ஹிரோஷிமாவில் உபயோகித்த அணுகுண்டைக் காட்டிலும் அதிக சக்தி பொருந்திய அணுகுண்டுகளை ருஷ்யா உற்பத்தி செய்திருப்பதாகச் செய்திகள் கூறுகின்றன.

ருஷ்யாவிடம் தற்போது ஐம்பது அணுகுண்டுகள் இருப்பதாக ஒரு துப்பறியும் நிபுணர் புள்ளி விவரங்களுடன் துலக்குகிறார்.

இவ்விவரங்களிலிருந்து ஒரு விஷயம், அதாவது ஏற்கனவே இணையற்ற இராணுவ பலம் வாய்ந்த ருஷ்யாவிடம் அணுகுண்டுக் குவியலும் இருக்கிறது என்ற விஷயம் நிச்சயமாகிறது.

இந்நிலையில், அணுகுண்டு சக்தி பொருந்திய அமெரிக்காவும் ருஷ்யாவும் மோதிக் கொள்ளும் படியான பயங்கர நிலைமை ஏற்படுமாயின், மூன்றாவது உலக மகாயுத்தம் மூளுமாயின், அதுவே அதி பயங்கரமானதாக இருக்கும். அதிலும் அந்த யுத்தம் அணுகுண்டு யுத்தமாக இருக்குமாயின், அது யுகத்தின் அந்தமாக, அக்கினிப் பிரளயமாக முடியலாம்!

எனவே, அணுகுண்டுகள் சம்பந்தமாகச் சர்வ தேசக் கட்டுப்பாட்டுக்குத் தாம் தயாராக இருப்பதாய் ஸ்டாலின் கூறியிருப்பதை அமெரிக்கா வரவேற்று, அணுகுண்டு பயங்கரத்திலிருந்து உலகத்தை விடுவிக்க முன் வர வேண்டும்.

இது வரையில் உற்பத்தி செய்யப் பட்டுள்ள அணுகுண்டுகளை யெல்லாம் மனித சஞ்சாரமற்ற துருவப் பிரதேசங்களில் கொண்டு போய்க் கடலுக்கு அடியில் கொட்டி விட வேண்டும்.

அவர்கள் செய்யும் இந்தக் கைங்கர்யத்தைக் காட்டிலும் உலக சமாதானத்துக்கு உற்ற அங்குரார்ப்பணம் வேறு என்ன இருக்க முடியும்!

# ஓநாய் வாதம் அல்ல; அதற்கு முத்தண்ணா!

இலங்கைப் பிரதமர் ஸ்ரீ சேனநாயகா பர்மா முதலிய நாடுகளுக்குச் செல்லும் மார்க்கத்தில் சென்னைக்கு விஜயம் செய்திருந்தார். ஒரு நாள் இங்கே தங்கியும் இருந்தார். அச்சமயம் பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குப் பேட்டி கொடுத்தார். இலங்கையில் உள்ள இந்தியர்களின் பிரஜா உரிமைப் போராட்டத்தைப் பற்றித் தம் கருத்தைத் தெரிவித்தார். இதற்காகவெல்லாம் அவருக்கு நன்றி செலுத்துகிறோம். ஏதோ அந்த மட்டில் இலங்கை இந்தியர்களின் நிலைமையைப் பற்றிய உண்மையை இங்குள்ளவர்களுக்கு விளக்குமாற்றால் விளக்கவேண்டுமென்று எண்ணினாரே, அது வரையில் விசேஷந்தானே!

"இப்போது இலங்கைப் பிரஜா உரிமைக்காக மனுப் போட்டிருக்கிற இரண்டே கால் லட்சம் இந்தியர்களுக்கும் ஏன் அந்த உரிமையை உடனே கொடுத்துவிடக் கூடாது! ஏன் காலதாமதம் செய்ய வேண்டும்!" என்று கேட்ட கேள்விக்குப் பிரதமர் சேனநாயகா ஒரு பிரமாதமான பதிலைச் சொன்னார். அதை ஓநாய் ஆட்டுக் குட்டியிடம் சொன்ன வாதம் என்று கூற முடியாது; அதற்கு முத்தண்ணா வாதமாகச் சொல்ல வேண்டும்.

"1931-ம் வருஷத்திலிருந்து விண்ணப்பம் போட்டு இலங்கைப் பிரஜையாவதற்குச் சந்தர்ப்பம் இருந்தது. இந்த இருபது வருஷமும் சும்மா இருந்துவிட்டு இப்போது அவசரப்படுவானேன்! அப்போது அவர்கள் மனுப் போடுவதற்குத் தாமதம் செய்தபடியால் இப்போது நாங்கள் மனுவைப் பைஸல் செய்வதற்குத் தாமதம் செய்கிறோம்!" என்றார்.

ஏன்! எப்படி யிருக்கிறது வாதம்!

ஒரு வியாதியஸ்தன் வைத்தியரிடம் போகிறான். "ஐயா! உயிர் போகிறது! மருந்து கொடுங்கள்!" என்கிறான். "உனக்கு வியாதி வந்து இருபது மாதம் ஆகிறது. இத்தனை நாளும் ஏன் நீ வரவில்லை! இப்போது அவசரப்படுத்துகிறாயே! நீ அப்போது தாமதம் செய்தபடியால் நானும் இப்போது மருந்து கொடுக்கத் தாமதம் செய்வேன்!" என்றால், அந்த வைத்தியர் எப்பேர்ப் பட்டவரா யிருக்க வேண்டும்! ஓநாய்க்கு முத்தண்ணா என்று அவரைச் சொல்லலாம் அல்லவா!

1931-ம் வருஷத்திலிருந்து 1947-ம் ஆண்டுவரையில் இந்தியா - இலங்கை இரண்டு நாடுகளும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் அடிமை நாடுகளாயிருந்தன; அப்போதெல்லாம் இலங்கைப் பிரஜா உரிமைக்கோ, இந்தியப் பிரஜா உரிமைக்கோ மதிப்பு ஒன்றுமில்லை.

இலங்கையில் உள்ள இந்தியத் தொழிலாளிகளோ பெரும்பாலும் ஐரோப்பிய முதலாளிகளின் கீழ் அவர்களுடைய தோட்டங்களில் வேலை செய்தவர்கள். அந்தச் சூழ் நிலையில் "நாம் எதற்காக இந்த நாட்டுப் பிரஜைகளாக வேண்டும்! இந்த ஐரோப்பிய முதலாளிகளுக்கு அடிமைகளாக நம் பிள்ளை குட்டிகளை ஏன் விட்டு விட்டுப் போக வேண்டும்!" என்று அவர்களுக்குத் தோன்றியிருக்கக்கூடியது இயல்பு அல்லவா!

இப்போது இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டது; இலங்கையும் 'சுதந்திரம்' பெற்றிருக்கிறதாகவே சொல்லப்படுகிறது. ஆகவே சுதந்திர இலங்கையில் பிரஜா உரிமையைக் கோரி அங்கே பரம்பரையாக வாழ்ந்து வரும் இந்தியத் தொழிலாளிகள் மனுப் போட்டிருக்கிறார்கள்.

அந்த மனுக்களைப் பைஸல் செய்வதில் எதற்காகத் தாமதம் ஆக வேண்டும்!

இலங்கையிலுள்ள இந்தியத் தலைவர்கள் ஸ்ரீ சேனநாயகாவின் மீது ஒரு குற்றம் சாட்டுகிறார்கள். "பிரஜா உரிமை விஷயத்தைத் தாமதப்படுத்துவதற்குக் காரணம் வரப்போகும் பொதுத் தேர்தலில் இந்தியர்களுக்கு வோட்டு இல்லாமல் செய்து விட வேண்டும் என்பதுதான்" என்று கூறுகிறார்கள். இவர்களுடைய குற்றச் சாட்டை ஸ்ரீ சேனநாயகாவின் கோணல் வாதம் உறுதிப்படுத்துகிறது.

இதற்கு மேலே இன்னும் ஒரு போடு போட்டார் ஸ்ரீ சேனநாயகா. "இலங்கையில் இலங்கைப் பிரஜைகளுக்கு உள்ள உரிமைகளைக் காட்டிலும் இந்தியர்களுக்குச் சில விசேஷ உரிமைகள் இருக்கின்றன! அப்படியிருக்க ஏன் வீணாக முறையிட வேண்டும்!" என்றார்.

"அத்தகைய விசேஷ உரிமைகள் எங்களுக்கு வேண்டாம்! இலங்கைப் பிரஜைகளுக்கு உள்ளவை போன்ற சம உரிமைகள் எங்களுக்கு இருந்தால் போதும்!" என்று எட்டு லட்சம் இந்தியத் தொழிலாளர்கள் சொல்கிறார்கள். இவர் கொடுப்பதை விட அவர்கள் குறைவாகத்தானே கேட்கிறார்கள்! ஏன் கொடுத்து விட்டு நிம்மதியாக

இருக்கக் கூடாது? அரிசிக்குச் சப்பைக் கட்டுக் கட்டிக் கொண்டு ஏன் அவஸ்தைப்பட வேண்டும்!

ஸ்ரீ சேனு நாயகா இம்மாதிரி யெல்லாம் பேசுவதே அவருடைய கட்சியின் பலவீனத்தை அவர் ஓரளவு உணர்ந்திருக்கிறார் என்பதற்கு அறிகுறி. இலங்கையிலுள்ள நம் இந்தியச் சகோதரர்கள் பொறுமையை இழக்க வேண்டிய அவசியம் இல்லை. சுதந்திர உலகத்தின் அபிப்பிராயம் அவர்களுக்கு மிகவும் சாதகமாகவே இருக்கிறது. சத்தியமும் நீதியும் அவர்கள் பக்கத்தில் இருக்கின்றன. இன்றில்லாவிட்டால் நாளைக்கு அவர்கள் வெற்றி பெறுவது நிச்சயம்.

# சத்தியசந்தர் சஞ்சீவி ரெட்டி!

ஆந்திர தேசத்து அரசியல் வாதிகளில் ஒரு சத்திய சந்தர், ஒரு யோக்கியர் நிச்சயம் இருக்கிறார் என்று சமீபத்தில் வெளியாயிற்று.

ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ சஞ்சீவி ரெட்டியைத்தான் குறிப்பிடுகிறோம்.

இந்திய பார்லிமெண்டுக்கும் மாகாண சட்ட சபைக்கும் காங்கிரஸ் அபேட்சகர்களாக நிற்க விரும்பி அறுநூற்றுச் சொச்சம் விண்ணப்பங்கள் ஆந்திர நாட்டிலிருந்து வந்தனவாம்.

"அவற்றைப் பார்த்த போது எனக்கு மிக்க ஏமாற்றம் ஏற்பட்டது. படித்தவர்களும் தகுதி வாய்ந்தவர்களும் பலர் விண்ணப்பம் போடவில்லை" என்று சஞ்சீவி ரெட்டி வருத்தப்பட்டார்.

அந்த வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்காக மகாபலிபுரம் கடற்கரைக்குப் போனார். வந்த விண்ணப்பங்களைப் பரிசீலனை செய்து ஏதோ காமா சோமா என்று அபேட்சகர்களைப் பொறுக்கி ஜாபிதாவையும் அனுப்பி விட்டார்.

விண்ணப்பம் போடாதவர்களின் பெயர்கள் சிலவற்றையும் அவர் சேர்த்திருக்க வேண்டுமென்று காண்கிறது. ஏனெனில் ஜாபிதாவில் பெயர் உள்ளவர்களில் சிலர் "எங்களை ஏன் சேர்த்தீர்கள்! நாங்கள் தேர்தலுக்கு நிற்க முடியாது!" என்று சொல்லுகிறார்கள்.

ஆந்திர தேசத்தில் இத்தகைய நிலைமை ஏற்பட்டிருப்பதற்கு ஸ்ரீ காளா வெங்கட்ராவின் கைங்கரியம் பெரும்பாலும் காரணம் என்று ஊகிக்கலாம். கோஷ்டி மனப்பான்மை ஓங்கி 'வேண்டாதவர்'களை யெல்லாம் வெளியேற்றி வந்தால், கடைசியில் தகுதியுள்ளவர்களே கிடைக்காமற் போகும் நிலைமை ஏற்படுவது இயல்புதானே!

தமிழ் நாட்டிலும் அபேட்சகர் பொறுக்கும் கமிட்டியார் ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டுப் போனார்கள் என்று தெரிகிறது. அவர்களுடைய கஷ்டம் முடிந்து விட்டதாகத் தோன்றவில்லை.

தலைக்கு தலையாகவே அவர்கள் அபேட்சகர் ஜாபிதாவைத் தயாரிக்க வேண்டியிருக்கிறது. இடையிடையே அங்குமிங்கும் ஓடித் தகுதி வாய்ந்த அபேட்சகர்களைத் தேடி அலைய வேண்டியதாயிருக்கிறது.

கமிட்டியாரைப் பேட்டி காணப் போன மனுதார்கள் சிலரும் மிகவும் கஷ்டப்பட்டுப் போனதாகத் தெரிகிறது.

"உங்களுக்கு ஏதாவது சொல்லிக் கொள்ள வேணுமா?" என்று கேட்கப்பட்டவுடனேயே மனுதார்கள் அசந்து போய் விடுகிறார்கள். எவ்வளவோ அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள வேணும்! நெஞ்சில் இருக்கிறது; ஆனால் உதட்டில் வர மறுக்கிறது! சிறிது நேரம் தவித்துத் தத்தளித்துவிட்டு "உங்களுக்குத் தெரியாததை நான் என்ன சொல்லிக் கொடுக்கப் போகிறேன்!" என்று கூறி விட்டுத் திரும்பி விடுகிறார்கள்.

இந்தியப் பார்லிமெண்டுக்கு அபேட்சகராக விரும்பிய மனுதார் ஒருவர் தேர்தல் கமிட்டியின் முன்பு போனார்.

"பார்லிமெண்டுக்கு நீர் மனுப் போட்டிருக்கிறீரே! தேர்தலில் உம்மால் எவ்வளவு பணம் செலவு செய்ய முடியும்!" என்று கமிட்டி அங்கத்தினர் ஒருவர் கேட்டார்.

மனுதார் பிரமித்து நின்றார். "இதேதடா! பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்ததே! பார்லிமெண்டு அங்கத்தினரானால் பணம் சம்பாதிக்கலாம் என்று சொன்னார்கள். இவர்கள் இப்படிக் கேட்கிறார்களே!" என்று எண்ணித் திகைத்துப் போய் விட்டார்.

"என்ன, ஐயா, சும்மா நிற்கிறீர்! உம்மிடம் ஐம்பதினாயிரம் ரூபாய் ரொக்கம் இருக்கிறதா!" என்று இன்னொரு அங்கத்தினர் கேட்டார்.

அவ்வளவுதான்; மனுதார் மூர்ச்சை யடைந்து விழுந்து விட்டார்! விழுந்து எழுந்ததும் சட்டைப் பையில் வழிச் செலவுக்குக் கொண்டு வந்த ஐந்து ரூபாய் பணம் பத்திரமா யிருக்கிறதா என்று தடவிப் பார்த்துக் கொண்டு ஓட்டம் பிடித்தார்!

பாவம்! தமிழ் நாட்டுத் தேர்தல் கமிட்டியின் கஷ்டங்கள் சொல்லத் தரமல்ல. அபேட்சகர் ஜாபிதா முழுதும் வெளியான பிறகுதான் எவ்வளவு கஷ்டப்பட்டு ஆள் பிடித்திருக்கிறார்கள் என்பது பொதுமக்களுக்குத் தெரிய வரும்.

# அவர் 'தந்திரம்' அவ்வளவுதான்!

ராஜாஜி அவர்களை உலகத்தின் சிறந்த அறிவாளிகளில் ஒருவர் என்று அவருடைய பரம 'விரோதி'கள் கூட ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் அவர்களிலே சிலர் 'ராஜாஜி ரொம்பத் தந்திரசாலி' என்றும் சொல்வார்கள். அவருடைய தந்திர சாமர்த்தியத்துக்கு அறிகுறியாகக் கண்ணில் அணிந்திருக்கும் புகை வர்ண மூக்குக் கண்ணாடியைச் சுட்டிக் காட்டுவார்கள்.

ராஜாஜியைத் தந்திரசாலி என்று சொல்வதைப் போன்ற பரம முட்டாள்தனம் வேறில்லையென்பதற்கு அவருடைய வாழ்க்கையிலேயே பல உதாரணங்கள் இருக்கின்றன. அத்தகைய கூரிய மதி படைத்தவர் தந்திரக்காரராயும் இருந்திருந்தால் சின்னஞ் சிறு மனிதர்கள் அவரை எதிர்த்து வென்றிருக்கமுடியாது. அவருடைய அரசியல் வாழ்க்கையில் இவ்வளவு தொல்லைகள் ஏற்பட்டிருக்காது.

ராஜாஜிக்குக் கொஞ்சங்கூடத் தந்திர சாமர்த்தியம் கிடையாது என்பதற்கு நிதரிசனமான கடைசி உதாரணம் இப்போது கிடைத்திருக்கிறது.

உள்நாட்டு மந்திரி பதவியிலிருந்து விலகப் போகும் தருவாயில் 'பத்திரிகை மசோதா' ஒன்றை அவர் கொண்டு வந்து பிடிவாதமாக அதைப் பார்லிமெண்டில் நிறைவேற்றிச் சட்டமாக்கி வைத்தார்.

இதனால் இமயமலையிலிருந்து கன்னியா குமரி வரையிலுள்ள பத்திரிகைகள் எல்லாம் அவரைத் தாக்கி எழுதும்படியான ஒரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொண்டார்!

டைம்ஸ் ஆப் இந்தியா முதலிய கடோத்கஜப் பத்திரிகைகளிலிருந்து நேற்றுக் கிளம்பிய வசைமொழிக் கந்தல் வரையில் ராஜாஜியைச் 'சுதந்திரத்தின் விரோதி' என்றும், தேசத்துக்குப் பெரிய தீங்கைச் செய்துவிட்டார் என்றும் எழுதின.

ஸ்ரீ ராமநாத கோயங்காவைப் போன்ற முதலாளி வர்க்கப் பிரதிநிதிகள் ராஜாஜியைச் 'சர்வாதிகார வெறி கொண்டவர்' என்று பார்லிமெண்டில் தாக்கும்படியான நிலைமையும் ஏற்பட்டது.

ராஜாஜி எவ்வளவு தந்திரசாலி என்று இப்போது நன்றாய்த் தெரிகிறதல்லவா!

தந்திரம் என்பது கொஞ்சமாவது தெரிந்தவராயிருந்தால் உத்தியோகத்திலிருந்து விலகும் சமயத்தில் எல்லாரும் புகழ்ந்து பாராட்டும்படியான சில காரியங்களைச் செய்திருக்க மாட்டாரா?

''பத்திரிகைக்காரர்களுக்குச் சட்ட திட்டம் என்பதே கிடையாது; அவர்கள் இஷ்டப்பட்டதை அச்சிட்டு வெளியிடலாம்; கொலை, களவு, கலகம் எதை வேண்டுமானாலும் தூண்டலாம்; எந்தப் பெண்மணியை வேண்டுமானாலும் அவதூறு செய்யலாம்; கோவிலை இடிக்கும்படி எழுதலாம்; ஒருவரைக் கொல்லும்படி தூண்டலாம்'' என்பதாக ஒரு புதிய சர்வ சுதந்திரப் பத்திரிகைச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றியிருக்கக் கூடாதா? நிறைவேற்றிப் பத்திரிகைகள் எல்லாம் புகழும்படி செய்து கொண்டிருக்கலாமே!

இத்துடன்தான் ஏன் நிற்கவேண்டும்? அவர்தான் உள்நாட்டு மந்திரியாயிற்றே? பால்ய விவாகத்தைத் தடுக்கும் சட்டம், கோவில்களுக்குக் குறுக்கிடும் சட்டம், கொலையை மறுக்கும் சட்டம், மோசடியைத் தண்டிக்கும் சட்டம்,—எல்லாவற்றையும் ரத்து செய்து இன்னும் பிரமாதமான 'பாபுலாரிடி'யை அடைந்திருக்கலாமே!

இப்படியெல்லாம் நல்ல பெயர் வாங்கிக் கொண்டு போக ராஜாஜிக்குத் தெரியவில்லை.

கெட்ட பெயர் வாங்கிக் கொண்டு போவதற்காகவே கங்கணங் கட்டிக் கொண்டவர் போல பத்திரிகைச் சட்டத்தைக் கொண்டு வந்து நிறைவேற்றியும் விட்டார்.

''இம்மாதிரி ஏன் செய்கிறீர்கள்? போகிற போக்கில் பத்திரிகைகளிடம் கெட்ட பெயர் வாங்கிக் கொண்டு ஏன் போக வேண்டும்?'' என்று சிலர் பார்லிமெண்டில் கேட்டார்கள்.

அதற்கு ராஜாஜி என்ன சொன்னார் தெரியுமா? ''நான் ஒரு காரியத்தைச் செய்யும்போது அதனால் நல்ல பெயர் வருமா, கெட்ட பெயர் வருமா என்று யோசிக்கும் வழக்கமில்லை. அந்தக் காரியம் சரியா, தவறா என்றுதான் யோசிப்பேன். நீங்களும் அப்படியே செய்யுங்கள். 'பாபுலாரிடி'யைப் பற்றிச் சிந்திக்காமல் ஒரு காரியம் நல்லதா, கெட்டதா என்று யோசித்து, நல்லதையே செய்யுங்கள். தேசத்துக்கு நன்மையான காரியங்களைச் செய்வதனால் கெட்ட பெயர் வருவதானாலும் அதைப் பொருட்படுத்த வேண்டாம்! என்று உபதேசித்தார்.

ராஜாஜிக்குத் தெரிந்த தந்திரம் அவ்வளவுதான்! அதாவது நல்லதைச் செய்ய வேண்டும். நல்லதையே செய்ய வேண்டும். நல்லதை மட்டுமே செய்ய வேண்டும் என்பதுதான்.

அவர் கொண்டு வந்து நிறைவேற்றிய பத்திரிகைச் சட்டமும் நாட்டுக்கு நல்ல பயனையே கொடுக்கும் என்பதில் நமக்குச் சந்தேகமில்லை.

# துரதிர்ஷ்டம் துரத்துகிறது!

'இங்கிலாந்து, கடைக்காரர்கள் அடங்கிய ஒரு நாடு' என்று நெப்போலியன் வர்ணித்ததாகக் கூறுவது உண்டு. பிரிட்டிஷாரின் சரித்திரத்தைத் துருவிப் பார்த்தால் நெப்போலியன் கூறியது முக்காலே மூன்று வீசமும் உண்மை என்பது புலனாகும்; அதாவது பிரிட்டிஷார் அரசியல் உரிமைகளைக் காட்டிலும் வியாபார லாபத்திலேயே அதிக கருத்துடையவர்கள் என்பது தெரிய வரும். இதற்கு உதாரணமாகச் சமீப காலத்திலேயே பல சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்றன.

இந்தியா, பர்மா முதலிய நாடுகளினால் இனி லாபம் இல்லை என்று தெரிந்ததும், மகத்தான அரசியல் உரிமைகளைக் கைவிட்டு விட்டு வெளியேற பிரிட்டிஷார் தயங்கவில்லை. பன்மடங்கு பெரிய தேசமான பாரத நாட்டை விட்டு வெளியேறிய பிரிட்டிஷார், மிகச் சிறியவையான ஈரானிலும் எகிப்திலும் மற்றும் இரண்டொரு ஆசியா நாடுகளிலும் தங்களுக்கு உள்ள ஆதிக்கத்தைக் கைவிட மனமில்லாமல் இருப்பதற்குக் காரணம் பெரிதும் வியாபார நோக்கம்தான்.



மத்திய கேந்திரத்தில் ஜான்புல் தவிக்கிறார்

ஈரானிலிருந்து பிரிட்டிஷாரைத் துரத்த முற்பட்டிருக்கும் துரதிர்ஷ்டம், இப்போது எகிப்து நாட்டிலிருந்தும் அவர்களைத் துரத்தக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது!

எகிப்தைச் சார்ந்த சூயஸ் கால்வாய் வழியாக வருஷா வருஷம் ஆயிரக்கணக்கான பிரிட்டிஷ் வியாபாரக் கப்பல்கள் செல்லுகின்றன. சூயஸ் கால்வாய் பிரிட்டிஷாரின் ஆதிக்கத்தில் இருப்பதால்தான் யாதொரு தடையும் நிபந்தனையுமின்றிப் பிரிட்டிஷ் கப்பல்கள் போய் வருவது சாத்தியமாகிறது. சூயஸ் கால்வாயில் தங்களுடைய ஆதிக்கத்தை நிலை நிறுத்துவதற்குப் பிரிட்டிஷார் எகிப்தைப் பணியும்படி செய்ய வேண்டியிருக்கிறது. எகிப்தைப் பணிய வைப்பதற்கு அவர்கள் சூடானில் தங்கள் உரிமைகளுக்குக் குந்தகம் விளையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. சூடான் வழியாகச் செல்லும் நைல் நதி ஜலத்தைத் தடுத்து விட்டால் எகிப்து அதோகதியாகிவிடும் அல்லவா!

இந்த உண்மையை உணர்ந்தே, மேற்படி இரண்டு பிரதேசங்களிலும் பிரிட்டிஷாருக்கு உரிமையளித்து 1936-ம் வருஷத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையை ரத்து செய்துவிடும்படி எகிப்து பிரதம மந்திரி நஹாஸ் பாஷா எகிப்து பார்லிமெண்டைக் கேட்டுக் கொண்டிருக்கிறார். அவ்விதம் பிரிட்டனை எதிர்க்கத் துணிந்துள்ள எகிப்தியர்களை மிரட்டுவதற்காகப் பிரிட்டன் சூயஸ் கால்வாயில் உள்ள தன் துருப்புகளை ஆயத்தமாக வைத்துக்கொள்ள முனைந்திருக்கிறது.

ஏற்கனவே ஈரான் கொடுத்த அடியினால் தள்ளாடிக் கொண்டிருக்கும் பிரிட்டன், இப்போது எகிப்து கொடுத்துள்ள அடியை எப்படிச் சமாளிக்கப் போகிறதோ, தெரியவில்லை.




# பூர்வ கதை

தமிழகத்தின் சரித்திரத்தில் இராஜ ராஜ சோழர் என்று புகழ் பெற்ற அருள்மொழி வர்மர் இளவரசராயிருந்த சமயத்தில் இலங்கையில் சோழநாட்டுப் படைகளுக்குத் தலைமை வகித்துப் போர் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய தந்தை சுந்தரசோழ சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டுத் தஞ்சையில் படுத்த படுக்கையில் இருந்தார். சுந்தர சோழரின் மூத்த குமாரரும் பட்டத்து இளவரசருமான ஆதித்த கரிகாலர் காஞ்சியில் தங்கியிருந்தார். இரண்டு இராஜ குமாரர்களுக்கும் நடுவில் பிறந்தவரான குந்தவை பழையாறை நகரில் செம்பியன் மாதேவியின் ஆதரவில் இருந்து வந்தார்.

சோழ சாம்ராஜ்யத்துப் பெருந்தரத்து அதிகாரிகளிலே மிக முக்கியமானவர்கள் அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள். பெரிய பழுவேட்டரையர் ஏறக் குறையச் சோழநாட்டின் சர்வாதிகாரி பதவியை வகித்து வந்தார். சாம்ராஜ்யத்தின் தன பொக்கிஷமும் தானிய பண்டகசாலையும் அவருடைய வசத்தில் இருந்து வந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதி பதவியை வகித்துவந்தார். சுந்தர சோழ சக்கரவர்த்தி பெரிதும் இந்த இரு சகோதரர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தார்.



பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். நந்தினியும் குந்தவையும் ஒருவரை யொருவர் துவேஷித்தனர். ஒருவரை யொருவர் அவமானப்படுத்தவும் பழி வாங்கவும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நந்தினியின் தூண்டுதல் காரணமாகப் பெரிய பழுவேட்டரையர் ஒரு பெரிய சதியில் ஈடுபட்டார். சுந்தர சோழரின் இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்து விட்டு, அவருடைய பெரிய தந்தை மகன் மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றத் தீர்மானித்தார். இதற்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய சிற்றரசர்களின் பூரண சம்மதத்தையும் பெற்ருர். காஞ்சியிலிருந்த ஆதித்த கரிகாலர் தம் தந்தையைத் தஞ்சையிலிருந்து காஞ்சிக்கு வரும்படி செய்வதற்காகக் காஞ்சியில் ஒரு பொன் மாளிகை கட்டினுர். அதை வந்து பார்க்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டு தஞ்சைக்கு ஓலை கொடுத்து அனுப்பினுர். ஓலையை எடுத்துச் சென்றவன் வந்தியத் தேவன் என்னும் பழைய வாணர் குலத்து வீரன். அவன் வழியில் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்தபோது மேற்படி சதியா லோசனையைப் பற்றித் தெரிந்துகொண்

டான். தஞ்சை சென்று சுந்தர சோழரிடம் ஓலையைக் கொடுத்த பிறகு பழையாறைக்குப் போய்க் குந்தவை தேவியைக் கண்டான். அவளிடம் தான் அறிந்ததையெல்லாம் சொன்னான். குந்தவை அவனை இலங்கை சென்று தன் அருமைச் சகோதரனை அழைத்து வரும்படி ஏவினாள். வழியில் பல அபாயங்களுக்குத் தப்பி வந்தியத்தேவன் இலங்கை வந்து அருள்மொழி வர்மரிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான். அதே சமயத்தில் இளவரசரைத் தேடிக் கொண்டு இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர் ஆழ்வார்க்கடியானிடம் இளவரசர் இலங்கையிலேயே இருத்தல் நலம் என்று சொல்லி அனுப்பினார். தம்பியைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படி ஆதித்தகரிகாலர் பார்த்திபேந்திரனை அனுப்பி யிருந்தார். சோழகுலத்தை அடியோடு கருவறுக்கச் சபதம் செய்திருந்த கொலைகாரர் கூட்டத்தைச் சேர்ந்த இருவரும் இலங்கைக்கு வந்திருந்தார்கள்.




அருள்மொழி வர்மர் இலங்கைக்கு வந்த புதிதில் அவர் தண்டு இறங்கி யிருந்த இடத்தை ஊமை ஸ்திரீ ஒருத்தி சுற்றிச் சுற்றி வந்து ஓலமிட்டாள். இளவரசர் அவளருகில் சென்று பார்த்த போது குழந்தைப் பிராயத்தில் தன்னைக் காவேரி நதியில் மூழ்கிப் போய் விடாமல் காப்பாற்றியவள் அவள் தான் என்று அறிந்தார். இளவரசர் தங்கியிருந்த இடம் கொடிய நடுக்கு சுரம் பரவியிருந்த இடம் என்பதை அம்மாதரசி உணர்த்தி அங்கிருந்து போய் விடும்படி எச்சரித்தாள்.

அநுராத புரத்தின் வீதிகளில் அருள்மொழி வர்மரும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் மகாபோதி விஹாரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்கள்மீது ஒரு பழைய மாளிகையின் முகப்பு இடிந்து விழுவதற்கிருந்தது. அந்தச் சமயத்தில் மேற் கூறிய மூதாட்டி தோன்றிக் கை தட்டி அழைத்து அவர்களைக் காப்பாற்றினாள்.

மூவரும் இளவரசர் வழக்கமாகத் தங்கிய விடுதிக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. இளவரசர் இலங்கையில் அம் மூதாட்டியைத் தாம் சந்தித்த வரலாற்றை அவர்களுக்குக் கூறினார்.

## அத்தியாயம் 38

# சித்திரங்கள் பேசின!

இளவரசர் சட்டென்று கதையை நிறுத்தி விட்டு "உங்களுக்கு ஏதாவது காலடிச் சத்தம் காதில் விழுந்ததா?" என்று கேட்டார்.

கதையில் முழு கவனம் செலுத்தியிருந்த தோழர்கள் இருவரும் தங்களுக்கு ஒன்றும் கேட்கவில்லை என்றார்கள்.

ஆழ்வார்க் கடியான் சற்று நிதானித்து விட்டு "நாம் உட்கார்ந்திருக்குமிடம் முன்னைவிட இப்போது உஷ்ணமா யிருக்கிறதே!" என்றான்.

"ஏதோ புகை நாற்றம் கூட வருகிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"ஐயா! இந்த இடத்தில் அபாயம் ஒன்றுமில்லையே?" என்று ஆழ்வார்க்கடியான் கவலையுடன் கேட்டான்.

"அபாயம் ஏதாவது இருந்தால் காவேரி அம்மன் கட்டாயம் வந்து எச்சரிப்பாள். கவலை வேண்டாம்!" என்று இளவரசர் கூறி மேலும் தொடர்ந்து சொன்னார்:—

"அந்த இடத்தை விட்டு உடனே தாவடியைக் கிளப்பிக் கொண்டு புறப்பட்டோம். அப்படியும் நமது வீரர்களில் பத்துப் பேருக்குக் குளிர் காய்ச்சல் வந்து விட்டது. அம்மம்மா! அந்தக் காய்ச்சல் மிகப் பொல்லாதது. எப்போர்ப்

பட்ட வீரனையும் கோழையாக்கி விடும். உடம்பெல்லாம் போரில் காயம் பட்டும் கலங்காதவர்கள் மூன்றுநாள் காய்ச்சலில் மனம் தளர்ந்து 'ஊருக்குப்போக வேண்டும்' என்று சொல்ல ஆரம்பித்து விடுவார்கள். சோழர்களின் குல தெய்வமான துர்க்கா பரமேஸ்வரிதான் அந்த ஊமை ஸ்திரீயின் உருவத்தில் வந்து எங்களை அங்கிருந்து புறப்படச் செய்தார் என்று கருதினேன். அதற்குப் பிறகும் தேவி என்னைக் கைவிட்டு விடவில்லை. நான் போகுமிடங்களுக்கெல்லாம் அவளும் தொடர்ந்து வந்துகொண்டிருந்தாள். வன விலங்குகள், மலைப் பாம்புகள், மறைந்திருந்த எதிரிகள் — இத்தகைய பல ஆபத்துக்களிலிருந்து என்னைக் காப்பாற்றினாள். திடீரென்று எப்படித் தோன்றுவாளோ, அப்படியே மறைந்தும் விடுவாள். சில நாளைக்குள் அந்தத் தேவியுடன் முகபாவத்தினாலும் சைகைகளினாலும் பேசும்சக்தியை நான் பெற்றுவிட்டேன். பெரும்பாலும் அவள் உள்ளத்தில் நினைப்பதை என் நெஞ்சம் தெரிந்து கொண்டு விடும். அது மட்டுமல்ல; அம்மாதரசியைக் கண்ணால் பார்க்காமலேயே அவள் பக்கத்தில் எங்கேயோ இருக்கிறாள் என்பதை நான் அறிந்து கொள்வேன். இப்போது கூட,......... நல்லது; நீங்கள் உடனே சென்று உங்கள் படுக்கையில் படுத்துக் கொள்ளுங்கள். தூக்கம் வரா விட்டாலும் தூங்குவது போல் இருங்கள்! சீக்கிரம்!" என்றார் இளவரசர்.

அவ்விதமே இருவரும் சென்று படுத்துக் கொண்டார்கள். கண்களை மூடிக் கொள்ளவும் முயன்றார்கள். ஆனால் அவர்களை மீறிய ஆவலினால் கண்ணிமைகள் மூடிக்கொள்ள மறுத்தன.



பார்த்துக்கொண்டிருக்கும்போதே நிலா வெளிச்சம் வந்த பலகணியின் அருகில் ஓர் உருவம் வந்து நின்றது. வீதியில் இடிந்து விழுந்த மாளிகைக்கு எதிரில் பார்த்த அதே ஸ்திரீயின் உருவந்தான். மிக மெல்லிய 'உஸ்' என்ற சத்தம் அங்கிருந்து வந்தது. அருள்மொழிவர்மர் எழுந்து பலகணி ஓரமாகச் சென்றார். வெளியில் நின்ற உருவம் ஏதோ சமிக்ஞை செய்தது. இளவரசர் அந்த அறையில் படுத்திருந்த தன் தோழர்களைச் சுட்டிக் காட்டினார். சமிக்ஞை பாஷையில் அதற்கும் ஏதோ மறுமொழி கிடைத்தது.

உடனே அருள்மொழிவர்மர் தோழர்கள் இருவரையும் தன்னைத் தொடர்ந்து வரும்படி சொல்லிவிட்டு அம்மாளிகையிலிருந்து வெளியேறினார். அந்த மூதாட்டி சென்ற வழியில் மூவரும் மௌனமாக நடந்தார்கள். இருபுறமும் மரங்கள் அடர்ந்து இருள் சூழ்ந்திருந்த பாதையில் அவர்கள் வெகு தூரம் சென்ற பிறகு திடீரென்று நிலா வெளிச்சத்தில் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டார்கள். கரிய பெரிய யானைகள் பல வரிசையாக நின்று, பிரம்மாண்டமான ஸ்தூபம் ஒன்றைக் காவல் புரிந்து கொண்டிருந்தன. அதைப் பார்த்ததும் வந்தியத்தேவனுடைய மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. அந்த மூதாட்டியோ சிறிதும் தயங்காமல் யானைக் கூட்டத்தை நோக்கி நடந்தாள். ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவன் காதோடு "அந்த யானைச் சிலைகள் எவ்வளவு தத்ரூபமாக இருக்கின்றன பார்த்தாயா?" என்று சொன்ன பிறகுதான் வந்தியத்தேவனுடைய திகைப்பு நீங்கியது. ஆயினும் அவனுடைய வியப்பு நீங்கியபாடில்லை.

ஒன்றோடொன்று நெருக்கி இடித்துக் கொண்டு நின்று, அந்த மலை போன்ற ஸ்தூபத்தைத் தாங்கிக்கொண்டிருப்பதுபோல் அமைக்கப்பட்டிருந்த யானைச் சிலை ஒவ்வொன்றுக்கும் இரண்டு நீண்ட தந்தங்கள் இருந்தன. அவ்விதம் வரிசையாக நின்ற நூற்றுக்கணக்கான யானைகளில் ஒன்றே ஒன்றுக்கு மட்டும் ஒரு தந்தம் ஒடிந்து போயிருந்தது. அந்த யானை அருகில் அவள் சென்றாள். அதன் காலடியில் கிடந்த பெரிய கருங்கல் ஒன்றை அகற்றினாள். அகற்றிய இடத்தில் ஒரு படிக்கட்டு காணப்பட்டது.

அதன் வழியாக அவள் இறங்கிச் செல்ல, மற்றவர்களும் பின் தொடர்ந்தார்கள். படிக்கட்டில் இறங்கிச் சிறிது தூரம் குறுகலான வழியில் சென்றதும் ஒரு மண்டபம் காணப் பட்டது. அதில் இரண்டு பெரிய அகல் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

விளக்குகளில் ஒன்றைத் தூண்டி விட்டு அந்த மூதாட்டி கையில் எடுத்துக் கொண்டாள். இளவரசரை மட்டும் தன்னுடன் வரும்படி சமிக்ஞையினால் தெரிவித்தாள். மற்ற இருவரும் இதைப் பற்றி முதலில் சிறிது கவலை கொண்டார்கள். ஆனால் அந்த மூதாட்டி விளக்கைத் தூக்கிப் பிடித்து அந்த மண்டபச் சுவர்களில் உள்ள சித்திரங்களைத்தான் இளவரசருக்குக் காட்டுகிறாள் என்று தெரிந்ததும் அவர்களுடைய கவலை ஓரளவு நீங்கியது.

• • •

இளவரசர் அம் மண்டபச் சுவரில் பார்த்த சித்திரங்கள் ஏதோ ஒரு கதையில் நிகழ்ந்த சம்பவங்களை வரிசைக் கிரமமாகக் கூறும் தொடர் சித்திரங்களாகத் தோன்றின. புத்த பகவானின் பூர்வ அவதாரக் கதைகளைப் புத்த விஹாரங்களில் சித்திரித்திருக்கும் முறைப்படி இச் சித்திரங்களும் அமைந்திருந்தன. ஆனால் இவை புத்தரின் அவதார நிகழ்ச்சிகளைக் குறிப்பிடவில்லை. ஒரு மானிடப் பெண்ணின் கதையையே சித்திரித்திருந்தது. அந்தச் சித்திரப் பெண்ணின் முகத் தோற்றம் ஏறக்குறைய இப்போது விளக்குப் பிடித்துக் காட்டிய மூதாட்டியின் முகத்தை ஒத்திருந்தது. ஆகவே இந்த ஊமை ஸ்திரீ தன்னுடைய வரலாற்றையே சித்திரங்களாக எழுதியிருக்கிறாள் என்று இளவரசர் இலகுவாகத் தெரிந்து கொண்டார்.

அவற்றில் முதல் சித்திரம் கடல் சூழ்ந்த தீவில் ஓர் இளம் பெண் தன்னந் தனியாக நிற்பதையும் அவளுடைய தகப்பனார் கட்டு மரம் ஏறி மீன் பிடித்துக் கொண்டு வருவதையும் காட்டியது. பின்னர், அந்தப் பெண் காட்டு வழியே சென்றாள். ஒரு மரத்தின் கிளைமீது ஓர் இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவன் இராஜ குமாரனைப் போலிருந்தான். அந்த மரத்தின் மீது ஒரு கரடி ஏறிக் கொண்டிருந்தது. இராஜ குமாரன் அதைக் கவனியாமல் வேறு திசையில் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் கூச்சலிட்டு விட்டு ஓடினாள். கரடி



அப்பெண்ணைத் துரத்தியது. மரத்தின் மேலிருந்த இளைஞன் குதித்து வந்து கரடியின்மேல் வேலை எறிந்தான். கரடிக்கும் அவனுக்கும் துவந்த யுத்தம் நடந்தது. அந்தப் பெண் தென்னை மரம் ஒன்றின் மீது சாய்ந்து கொண்டு கரடிக்கும் இளைஞனுக்கும் நடந்த சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியில் கரடி இறந்து விழுந்தது இளைஞன் அந்தப் பெண்ணை நெருங்கி வந்தான். அவளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தான். ஆனால் அவள் மறுமொழி சொல்லாமல் கண்ணீர் விட்டாள். பிறகு அவள் ஓடிப் போய்த் தன் தந்தையை அழைத்து வந்தாள். வந்த வலைஞன் தன் பெண் பேச முடியாத ஊமை என்பதைத் தெரிவித்தான். இராஜகுமாரன் முதலில் வருத்தப்பட்டான். பிறகு வருத்தம் நீங்கி அவளுடன் சிநேகம் செய்து கொண்டான். காட்டு மலர்களைக் கொய்து மாலை தொடுத்து அவள் கழுத்தில் போட்டான். இருவரும் கை கோத்துக் கொண்டு காட்டில் திரிந்தார்கள்.

ஒருநாள் பெரிய மரக்கலம் ஒன்று அந்தத் தீவின் சமீபம் வந்தது. அதிலிருந்து சில வீரர்கள் இறங்கி வந்தார்கள். இராஜ குமாரனைக் கண்டு பிடித்து அவனுக்கு வணக்கம் செலுத்தினார்கள். அவனை மரக் கலத்துக்கு வரும்படி வருந்தி அழைத்தார்கள். இராஜகுமாரன் அந்தப் பெண்ணுக்கு ஆறுதல் கூறி விடை பெற்றுக் கொண்டான். கப்பலில் ஏறிச் சென்றான். அந்தப் பெண் அவன் போன பிறகு ரொம்பவும் வருத்தப்பட்டுக் கண்ணீர் பெருக்கினாள். அதை அவள் தகப்பன் பார்த்தான். ஒரு படகில் அவளை ஏற்றிக் கொண்டு கடல் கடந்து சென்றான். கலங்கரை விளக்கம் ஒன்றை அடைந்து கரையில் இறங்கினான். அங்கே

ஒரு குடும்பத்தார் தகப்பனையும் மகளையும் வரவேற்றார்கள். எல்லாருமாக மாட்டு வண்டியில் ஏறிப் பிரயாணம் போனார்கள். கோட்டை மதில் உள்ள ஒரு பட்டணத்தை அடைந்தார்கள். அங்கே அரண்மனை மேன் மாடத்தில் இராஜகுமாரன் தலையில் கிரீடத்துடன் நின்றான். அவனைச் சூழ்ந்து ஆடை அலங்காரங்கள் புனைந்த பலர் நின்றார்கள். அதைப் பார்த்த அந்த இளம் பெண்ணின் மனம் கலங்கியது. அவள் ஓரே ஓட்டமாக ஓடினாள். கடற்கரையை அடைந்தாள். கலங்கரை விளக்கத்தின் மேலேறிக் கீழே குதித்தாள். அலைகள் அவளைத் தாங்கிக் கொண்டன. படகில் வந்த ஒருவன் அவளைத் தூக்கிப் படகில் ஏற்றிக் காப்பாற்றினான். அவளைப் பேய் பிடித்திருக்கிறதென்று எண்ணி ஒரு கோயிலில் கொண்டு போய் விட்டான். கோயில் பூசாரி அவளுக்கு விபூதி போட்டு வேப்பிலை அடித்தான்.

யாரோ ஒரு பெரிய ராணி சுவாமி தரிசனம் செய்ய அந்தக் கோயிலுக்கு வந்தாள். பூசாரி அந்தப் பெண்ணைப் பற்றி ராணியிடம் சொன்னான். ராணி கர்ப்பந் தரித்திருந்தாள். அந்தப் பெண்ணும் தன்னைப் போலவே கர்ப்பவதி என்று அறிந்தாள். பல்லக்கில் ஏற்றிக் கொண்டு அரண்மனைக்கு அழைத்துப் போனாள். அரண்மனைத் தோட்டத்தில் அந்தப் பெண்ணுக்கு இரண்டு குழந்தைகள் பிறந்தன. ராணி வந்து இரண்டு குழந்தைகளில் ஒன்றைத் தான் வளர்ப்பதாகச் சொன்னாள். முதலில் வலைஞர் பெண் அதை மறுத்தாள். பிறகு யோசித்துப் பார்த்தாள். இரண்டு குழந்தைகளுமே அரண்மனையில் வளரட்டும் என்று தீர்மானித்தாள். குழந்தைகளை விட்டு விட்டு நள்ளிரவில் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஓடிப் போய் விட்டாள். வெகு காலம் காட்டில் திரிந்து கொண்டிருந்தாள். ஆனால் குழந்தைகளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அடிக்கடி வந்து விடும். ஆற்றங்கரை ஓரமாக வந்து மரங்களின் மறைவில் ஒளிந்திருப்பாள். படகில் ராஜாவும் ராணியும் குழந்தைகளும் வருவார்கள். தூரத்திலிருந்தபடியே பார்த்து விட்டுப் போய் விடுவாள். ஒரு சமயம் ஒரு குழந்தை படகிலிருந்து தவறி விழுந்து விட்டது. அதை யாரும் கவனிக்கவில்லை. இவள் நீரில் மூழ்கிக் குழந்தையை எடுத்துக் கொடுத்தாள். உடனே மீண்டும் நதி வெள்ளத்தில் மூழ்கிச் சென்று அக்கரையை அடைந்து காட்டில் மறைந்து விட்டாள்.

* * *

இவ்வளவு நிகழ்ச்சிகளும் காவிக் கோட்டினால் தத்ரூப சித்திரங்களாக அச்சுவரில் வரையப்பட்டிருந்தன. இளவரசர் அருள்மொழிவர்மர் அளவில்லா ஆர்வத்துடனும் அதிசயத்துடனும் அச்சித்திரங்களைப் பார்த்துக் கொண்டு வந்தார். கடைசிச் சித்திரம் வந்ததும் இளவரசர், "நதியிலிருந்து காப்பாற்றப் பட்ட சிறுவன் நான்; காப்பாற்றியவள் நீ!" என்று சமிக்ஞையாகச் சுட்டிக் காட்டினார். அந்த மூதாட்டி இளவரசரைக் கட்டி அணைத்துக் கொண்டு உச்சி மோந்தாள்.

பின்னர் அந்த மண்டபத்தின் இன்னொரு மூலைக்கு இளவரசரை அழைத்துச் சென்றாள். அங்கே எழுதியிருந்த சில சித்திரங்களைக் காட்டினாள். அவை அவளுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகள் அல்ல. இளவரசருக்கு நேரக் கூடிய அபாயங்களைப் பற்றி அச்சித்திரங்களின் மூலமாகவும் சமிக்ஞைகளின் மூலமாகவும் எச்சரிக்கை செய்தாள்.

இவ்வளவையும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் மண்டபத்தின் ஓரத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தார்கள். நந்தினியின் முகத்தையும் இந்த ஊமை ஸ்திரீயின் முகத்தையும் வந்தியத்தேவன் அடிக்கடி ஒத்திட்டுப் பார்த்தான். அவன் மனதில் பற்பல எண்ணங்கள் உதித்தன; பற்பல சந்தேகங்கள் தோன்றின. அவற்றைக் குறித்துப் பேச அது சந்தர்ப்பம் அன்று எனப் பேசாதிருந்தான்.

யானைச் சிலைகள் பாதுகாத்த அந்தரங்க மண்டபத்திலிருந்து அவர்கள் வெளியே





வயதான, மிகவும் புனிதத் தன்மை வாய்ந்த போதி விருட்சம் இருந்தது.

பிக்ஷுக்களும் பிக்ஷுக்களல்லாத பக்தர்கள் பலரும் போதி விருட்சத்தை வலம் வந்தும் மலர்களைச் சொரிந்தும் வணங்கிக் கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அருள்மொழிவர்மரும் அந்தப் போதி விருட்சத்துக்கு வணக்கம் செலுத்தினர். "உலகத்தில் இராஜ்யங்களும் இராஜ்யங்களை ஆண்ட மன்னர்களும் மறைந்து போய் விடுவார்கள். ஆனால் தர்மம் என்றென்றைக்கும் நிலைத்து நிற்கும் என்பதற்கு இந்தப் போதி விருட்சம் நிதர்சனமாயிருக்கிறது!" என்று இளவரசர் மற்ற இருவரையும் பார்த்துக் கூறினர். இப்படிச் சொல்லிக் கொண்டே சுற்று முற்றும் பார்த்தார். ஒரு மூலையில் மூன்று குதிரைகள் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன. மூன்று குதிரைகளையும் பிடித்துக்கொண்டு மூன்று பேர் நின்று கொண்டிருந்தார்கள்.

இளவரசர் அங்கே சென்றதும் அவர்கள் மூவரும் முகமலர்ந்து மரியாதையுடன் வணங்கினார்கள். இளவரசர் அவர்களை ஏதோ கேட்டுத் தெரிந்துகொண்டார். வந்தியத் தேவனைப் பார்த்து "இராத்திரி எரிந்தது நாம் படுத்திருந்த மகாசேனரின் அரண்மனைதான்! நாமும் அதில் எரிந்து போய் விட்டோமோ என்று இவர்கள் பயந்து கொண்டிருந்தார்கள். நம்மை உயிரோடு பார்த்ததும் இவர்களுக்கு சந்தோஷம் தாங்க முடியவில்லை!" என்றார்.

"ஆயிரத்தைந்நூறு வயதான அரச மரம் இன்னும் நிற்பது என்னமோ உண்மைதான். ஆனால் தர்மம் செத்துப் போய் எத்தனையோ நாளாகி விட்டது!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"இனி ஒரு தடவை அவ்விதம் சொல்லாதே! நான் ஒருவன் உயிரோடிருக்கும் போது தர்மம் எப்படிச் சாகும்?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

மூன்று பேரும் குதிரைகள் மீது ஏறிக்கொண்டு புறப்பட்டார்கள். அநுராதபுர நகரத்தின் வடக்கு வாசல் வழியாக வெளியேறினார்கள். திருவிழாக் கூட்டம் இன்னமும் நகரிலிருந்து நாலாபுறமும் 'ஜேஜே' என்று சென்று கொண்டிருந்தபடியால் இவர்களை யாரும் கவனிக்கவில்லை.

அநுராதபுரத்துக்கு வட கிழக்கில் ஒரு காத தூரத்தில் மகிந்தலை என்னும் சிறிய பட்டணம் இருந்தது. "அசோக சக்கரவர்த்தியின் குமாரர் மகிந்தர் முதன் முதலில் இந்த ஊரிலேதான் வந்திறங்கிப் புத்த மதத்தை உபதேசிக்கத் தொடங்கினர்! எப்படிப்பட்ட பாக்கியசாலி அவர்! ஆயுதம் தாங்கிய படைகளை அழைத்துக் கொண்டு நாடு கவர்வதற்கு அவர் போகவில்லை. கொலைகாரர்களிடம் சிக்காமல் ஒளிந்து மறைந்து திரியவேண்டிய அவசியமும் அவருக்கு ஏற்படவில்லை!" என்றார் அருள்மொழிவர்மர்.

"அவருக்குக் கொடுத்து வைத்திருந்தது அவ்வளவுதான்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

இளவரசர் நகைத்தார்.

"நீர் எப்போதும் என்னை விட்டுப் பிரியவே கூடாது. நீர் பக்கத்தில் இருந்தால் எப்படிப்பட்ட கஷ்டமும் சந்தோஷமாகிவிடும்!" என்றார் இளவரசர்.

"அதேமாதிரி எப்படிப்பட்ட சந்தோஷமும் கஷ்டமாகிவிடும்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

இச்சமயத்தில் சாலையில் அவர்களுக்கு எதிர்ப் பக்கத்தில் ஒரு புழுதிப்படலம் தெரிந்தது. பல குதிரைகள் நாலுகால் பாய்ச்சலில் வரும் சத்தமும் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் சிறிய குதிரைப் படை ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. குதிரை வீரர்கள் கையில் பிடித்திருந்த வேல் முனைகள் காலை வெய்யிலில் பளபளவென்று ஜொலித்தன.

"ஐயா! உறையிலிருந்து கத்தியை உருவுங்கள்!" என்று எச்சரித்தான் வந்தியத்தேவன்.

(தொடரும்)

வந்தார்கள். மூதாட்டி அவர்களை அழைத்துக் கொண்டு அந்த ஸ்தூபத்தின் சிகரத்தை நோக்கி ஏறினாள். அவளுடைய தேக வலிமையைக் குறித்து மற்றவர்கள் அதிசயித்தார்கள். வந்தியத் தேவனுக்கு மிகவும் களைப்பாயிருந்தது. ஆயினும் வெளியில் சொல்லாமல் ஏறினான்.

பாதி ஸ்தூபம் ஏறியதும் நின்று பார்த்தார்கள். நகரத்தின் ஓரிடத்தில் தீயின் ஜுவாலை கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

"ஆகா! மகாஸேன சக்கரவர்த்தியின் புராதன மாளிகை தீப்பற்றி எரிகிறது!" என்றார் இளவரசர்.

"நாம் படுத்திருந்த இடமா?"

"அதுவேதான்!"

"அங்கே நாம் படுத்துத் தூங்கியிருந்தால்...?"

"நாமும் ஒரு வேளை அக்கினி பகவானுக்கு உணவாகி யிருப்போம்!"

"அதுதான் நாம் படுத்திருந்த அரண்மனை என்று இத்தனை தூரத்திலிருந்தபடி எதனால் சொல்கிறீர்கள்?"

"மண்டபத்துக்குள்ளே நான் பார்த்த சித்திரங்கள் என்னுடன் பேசின!"

"எங்களுக்குக் கேட்க வில்லையே?"

"அதில் ஒன்றும் அதிசயமில்லை. சித்திரங்கள் ஒரு தனி பாஷையில் பேசும். அந்த பாஷை தெரிந்தவர்களுக்குத்தான் அவற்றின் பேச்சு விளங்கும்."

"அந்தச் சித்திரங்கள் தங்களுக்கு இன்னும் என்ன தெரிவித்தன?"

"என் குடும்ப சம்பந்தமான பல இரகசியங்களைச் சொல்லின. இந்த இலங்கைத் தீவை விட்டு உடனே போய்விடும்படியும் தெரிவித்தன!..."

"சித்திரங்களின் பாஷை வாழ்க! வைஷ்ணவரே! என் கட்சி ஜயித்தது!" என்றான் வந்தியத்தேவன்.

"இளவரசே! சித்திரங்கள் அத்துடன் நிறுத்த வில்லை. இலங்கையில் உள்ள வரையில் கூரையின் கீழ்ப் படுக்க வேண்டாம். வீடுகளின் ஓரமாக நடக்க வேண்டாம். மரங்களின் அடியில் போக வேண்டாம் என்றும் சொல்லவில்லையா?" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சரியாகச் சொன்னீர்! உமக்கு எப்படித் தெரிந்தது?"



"தங்களுக்குச் சித்திரங்களின் பாஷை தெரியும். அடியேனுக்கு அபிநய பாஷை தெரியும். தங்கள் குல தெய்வம் தங்களிடம் பேசிக் கொண்டிருந்த போது அத்தெய்வத்தின் அபிநய முக பாவங்களைக் கவனித்துக் கொண்டிருந்தேன்!" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"சந்தோஷம்; இரவு இன்னும் ஒரு ஜாமந்தான் மிச்சமிருக்கிறது. இந்த ஸ்தூபத்தின் உச்சியில் ஏறிச் சிறிது நேரமாவது படுத்துத் தூங்கி விட்டுப் பொழுது விடிந்ததும் புறப்படுவோம்" என்றார் அருள்மொழிவர்மர்.

• • •

மறுநாள் உதயத்தில் சூரிய கிரணங்கள் சுளீர் என்று அடித்து வந்தியத்தேவனைத் தூக்கத்திலிருந்து எழுப்பின. முதல் நாளிரவு நடந்த உண்மையான நிகழ்ச்சிகள் போதாவென்று சதிகாரர்களும், தீ வைப்பவர்களும், ஊமைகளும், செவிடர்களும், மரத்தில் ஏறும் கரடிகளும், பேய் பிசாசுகளும், புத்த பிக்ஷுக்களும், மணிமகுடங்களும் ஒரே குழப்பமாக வந்தியத் தேவனுடைய கனவிலேயும் வந்து துன்புறுத்தினார்கள். சூரிய வெளிச்சத்தில் அவை யெல்லாம் மாயக் கனவுகளாகி மறைந்தன. குழப்பமும் பீதியும் பறந்தன.

இளவரசரும் ஆழ்வார்க்கடியானும் முன்னதாக எழுந்து பிரயாணத்துக்கு ஆயத்தமாகி யிருப்பதை வந்தியத்தேவன் கண்டான். அவனும் அவசரமாக ஆயத்தமானான். மூன்று பேரும் ஸ்தூப சிகரத்திலிருந்து இறங்கினார்கள். நடுவீதிகளின் வழியாகவே நடந்து சென்று மகாமேக வனத்தை நோக்கிச் சென்றார்கள். அந்த நந்தவனத்தின் மத்தியிலே தான் புராதனமான, ஆயிரத்தைந்நூறு


இரம்மியமானது...
ஹிமாலயா
புக்கே
டாய்லட், டால்கம் பௌடர்களின்
இனிமையான பரிமளம்
வாசனை மிகுந்த, நேர்த்தியான ஹிமாலயா புக்கே பௌடர்கள் உங்கள் அழகு பராமரிப்பிற்கு மிகவும் சிறந்தது. அவைகள் உங்கள் சருமத்திற்கு மிகவும் சாந்தியைக் கொடுக்கும். அவைகளின் நீடித்திருக்கும் பரிமளம் மலர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.
Himalaya Bouquet
நேர்த்தியான
இரண்டு இராஸ்மிக் தயாரிப்புகள்
HBP. 9-X30 TM

# நதிக்கரையிலே!

எழுதியவர் : ஸ்ரீ பன்னலால் பட்டேல்  மொழிபெயர்ப்பு : எஸ். வி. எஸ்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

கிழவி கதையைத் தொடர்ந்தாள். "அந்த இரண்டாவது மாப்பிள்ளையை நான் கூடப் பார்த்திருக்கிறேன். அவனைப் போல் யாரும் வேலை செய்ய மாட்டார்கள். மூன்று ஆட்கள் மூன்று நாள் செய்யும் காரியத்தை இவன் ஒரே ஆள் ஒரே நாளில் செய்து விடுவான். அதிகமாகப் பேசவும் மாட்டான். இப்படிப்பட்டவனை மாப்பிள்ளையாகப் பெற 'நான் முந்தி, நீ முந்தி' என்று போட்டி போட்டுக் கொண்டு வரமாட்டார்களா?"

"ஆமாம், ஆமாம்!" என்று முணு முணுத்தான் முதல் சந்நியாசி, ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டே.

கிழவி இதைச் சற்றும் பொருட் படுத்தாமல் சொல்லிக் கொண்டே போனாள்: "ஆனால் நவல் பாவம், ரொம்பவும் நல்லவள். அவள் நொண்டியைக்கூடக் கல்யாணம்செய்து கொண்டு சந்தோஷமாக இருந்துவிடுவாள். அவள் சுபாவம் அப்படி! ஆம், ஒருவனுக்குப் பின் இன்னொருவன் என்று இரண்டு புருஷர்களை மணந்தவள் என்றாலும் அவள் யாரிடமும் சண்டை போட்டுக் கொண்டது கிடையாது. ஆனால் இந்த தெய்வத்துக்குத் தான் கண்ணில்லை. அவளை ஒரு நாள் ஒரு நிமிஷம் கூட மன நிம்மதியுடன் இருக்க விடவில்லை" என்று சொல்லிவிட்டு விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள் கிழவி.

மாமா கூடக் கண்களைத் துடைத்துக் கொண்டார்: நவலோ முன்னமேயே கண்ணீர் பெருக்கத் தொடங்கி விட்டாள். யாராகிலும் அந்தச் சந்நியாசிகளைக் கூர்ந்து கவனித்திருந்தால் அந்த நொண்டியின் கண்களில் கண்ணீர் பள பளத்துக் கொண்டிருந்ததைப் பார்த்திருக்கலாம். இன்னொரு சந்நியாசிக்கும் உள்ளம் நெகிழ்ந்து விட்டது. இருப்பினும் அவன் "கதையை முடிச்சுடுங்க தாயே! அப்புறம் என்ன ஆச்சு!" என்றான்.

"கதை முடிந்தால் என்ன! முடியா விட்டால் என்ன!" என்று சொல்லி விட்டுக் கதையை வேகமாக முடிக்கப் பார்த்தாள். "உன்னூர் பெருதனக்காரருக்கும் என் மைத்துன (நவலின் அப்பா) னுக்கும் ரொம்ப நாளாகச் சண்டை இருந்து வந்தது. அதனால் தான் ஊரை விட்டுத் தள்ளி இவ்வளவு தூரத்தி லிருக்கிறோம்.

"அந்தப் பெருதனக்காரருடைய மகன் மூன்று வருஷத்துக்கு முன் ஒரு நாள், சந்தையில் நவலைப் பலாத்காரம் பண்ணி விட்டான். இதைக் கேட்ட என் மைத்துனர் அந்த முதுமைப் பிராயத்தில் என்ன செய்ய முடியும்! 'ஓ' வென்று இரைந்தார். இறந்துபோன தன் பிள்ளைகளை யெல்லாம் அவனைப் பழிக்குப் பழி வாங்க கூவி அழைத்தார். நவல் விம்மி விம்மி அழுது புலம்பினாள்.

"நவலினுடைய பெண்மைக்கு இழைக்கப்பட்ட அநீதியைக் கண்டு பொறுக்காமல் வர்தாக் நதியே அழுது புலம்பிக் கண்ணீர் பெருக்கினாற் போல் தோன்றியது. இப்படித் தந்தையும் மகளும் பட்ட மன வேதனையைக் கண்டு பொறுக்காமல், நவலினுடைய கணவன் நள்ளிரவில் புறப்பட்டு அந்தப் பெருதனக்காரர் மகனைக் கொன்று விட்டு வந்து, மாமனாரைக் கிழவனிடம் 'நான் பழி வாங்கி விட்டேன்; என் பழி தீர்த்து விட்டேன்' என்று எவ்வளவு எக்களிப்புடன் சொன்னான்! இப்படி அவன் தன் பெருமையை அளந்து விட்டுக் கொண்டிருந்த போது நவல் அவன் அருகில் சென்று, 'உடனே ஓடிப் போய்த் தப்பித்துக் கொள்' என்று சொன்னாள். அப்போது ஓடிப் போனவன் தான். வருஷம் மூன்றாகிறது; ஆளைக் காணவில்லை. நவலும் இன்னொரு கல்யாணம் செய்து கொள்ள மறுக்கிறாள்" என்று சொன்னாள்.

அப்போது "அத்தை! பாதி ராத்திரி ஆகி விட்டது. நீ சாப்பிட வரவில்லையா!" என்றாள் நவல் உள்ளிருந்தபடியே. இதைக் கேட்டதும் கிழவி அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருக்கிறாள். "அவர்களுக்கும் சோறு போட வேண்டுமென்றால் கொஞ்சம் கொண்டு போய்ப்போட்டு விட்டு வா" என்றாள் நவல். அப்போது அவள் குரல் நடுங்கியது.

சாப்பிட்ட பின்பும் அந்தச் சந்நியாசிகள் அவ்விடத்தை விட்டு நகருவதாகத் தோன்றவில்லை. நவல் தன் மாமாவைச் சாப்பிட உள்ளே அழைத்தாள். அப்போதும் அவர்கள் அவ்விடத்தை விட்டு நகரவில்லை. இப்போது நவலால் இதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. "ஏன் வேண்டுமென்று இங்கே தங்கிச் சாவின் பிடியில் அகப்பட்டுக் கொள்ள விரும்புகிறீர்கள்! எங்கேயாகிலும் உடனே ஓடிப் போங்கள்!" என்றாள்.



"உன்னிடம் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டும்; உன்னுடன் சற்று பேச வேண்டும்" என்று முதல் சந்நியாசி கூறினான்.

நொண்டி. "முதலில் நீ எங்களை இன்னார் என்று புரிந்து கொண்டாயா என்று சொல்" என்றான்.

நவல் இந்த நொண்டியை அன்பு கனியப் பார்த்துக் கொண்டே "அதெல்லாம் சரி, முதலில் இந்தக் கால் எப்படி முடமாயிற்று என்று சொல்" என்றாள்.

"அதுவா......அன்றைய நள்ளிரவில் நான் உயிருக்குப் பயந்து ஓடிக்கொண்டிருந்தபோது..." என்று ஆரம்பித்தவன் திடீரென்று "ஏன் நவல், நாங்கள் கேட்கும் கேள்விகளுக்குச் சரியாகப் பதில் சொல்லமாட்டேன் என்கிறாய்!" என்றான்.

நவல் தன் உதடுகளை அழுத்திப் பிடித்துக் கொண்டாள். அவளுக்குத் தன் வேலையே அளவு கடந்த கோபம் வந்தது. "உங்கள் கதையை நீட்டி முழக்கிக் கொண்டிருக்கிறீர்கள். எங்கேயாவது சீக்கிரம் ஓடிப்போங்கள், இந்த இருட்டிலேயே. இங்கே மரம், செடி, கொடிகள்கூட அரசாங்கத்துக்கு ஒற்று வேலை செய்கின்றன. ஆகவே, ஒரு விநாடிகூட வீணாக்காமல் உடனே ஓடிப் போய் விடுங்கள்" என்றாள்.

இதை அவன் சொன்னானோ இல்லையோ; முதல் சந்நியாசி, "நாங்கள் கைதியாகத்தானே இங்கே வந்திருக்கிறோம். அப்படிக் கைதாவதற்கு முன் உன்னை ஒன்று கேட்க......" என்று சொல்லிக்கொண்டே வந்தபோது நொண்டி குறுக்கிட்டான்.

"நீ என்ன முந்திரிக் கொட்டையாக இருக்கிறாயே! அவள் இதைப்பற்றி என்ன சொல்கிறாள் என்று கேட்காமலே நீ பேச ஆரம்பித்து விட்டாயே! நான் சொல்கிறபடி செய்......" என்றான்.

அவர்களைச் சீக்கிரமாக இவ்விடத்தை விட்டு விரட்ட வேண்டும் என்பதற்குத்தானோ, அல்லது அவர்கள் என்ன சொல்ல விரும்புகிறார்கள் என்று அறிய விரும்பத்தானோ என்னவோ, அவள் கட்டாந்தரையிருந்த இடத்துக்கு அருகில் வந்து, "சரி, நீங்கள் என்ன கேட்க விரும்புகிறீர்களோ, கேளுங்கள்!" என்றாள்.

இந்தத் திடீர் மாறுதல் முதல் ஆசாமியைச் சற்றுத் தடுமாற்றமடையச் செய்தது. அவன் தட்டுத் தடுமாறி "பார்......நாங்கள் என்ன கேட்கவேண்டும் என்று நினைத்தோமென்றால்... ஆனால் அதை என்ன, ஏது என்று அவ்வளவு சுலபமாகப் பளிச்சென்று சொல்லி விடவும் முடியாது. ஆகவே நீ, சற்று இங்கே உட்காரு......" என்றான்.

நொண்டிக்கு, தன் சகாவினுடைய இந்த வழவழப்புச் சற்றும் பிடிக்கவில்லை. "என்ன சொல்ல விரும்புகிறாயோ அதைப் பளிச்சென்று சொல்லி விடுவதுதானே" என்று அவனைப் பார்த்துக் கடிந்துகொண்டுவிட்டு, நேரே நவலைப் பார்த்தே பேச ஆரம்பித்து விட்டான்: "என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால் இவன் இங்கேயே இருக்கவேண்டும்; நான்......"

நவலுக்குக் கோபம் வந்தது. "கடவுளே! நீங்கள் இருவரும் விஷயம் சரியாகப் புரிந்து கொள்ளவே இல்லை போலிருக்கிறதே! விஷயம் என்னவென்றால், போலீஸ்காரர்கள் ஒருபுறமிருக்கட்டும், கிராம மக்கள் உங்களை அறியமாட்டார்கள். ஆகவே, நீங்கள் யார் இங்கே இருந்தாலும் சந்தேகப்பட்டுக் கைது செய்து விடுவார்கள். இது ஏன் உங்களுக்குப் புரியமாட்டேன் என்கிறது! ஆகவே, தயவுசெய்து நீங்கள் போங்கள்; போய் விடுங்கள்" என்றாள்.

"நீயொரு பிடிவாதக்காரி; நான் சொல்வதை நீ ஏன் புரிந்து கொள்ளமாட்டேன் என்கிறாய்! நான் சொல்வதைக் கேள். நான் நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று கைது ஆகப் போகிறேன். பிறகு......" என்று சொல்லிக் கொண்டு வந்தான் நொண்டி.

மற்றவன் குறுக்கிட்டு, நவலிடம் கூறினான்: "அது சரியல்ல; இவன் நொண்டி. ஆகவே இவனை யாரும், இத்தனை வருஷங்களுக்குப் பிறகு தெரிந்துகொள்ளவும் மாட்டார்கள். ஆகவே நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று, நான்தான் குற்றம் செய்தவன், கொலையாளி என்று ஒப்புக் கொண்டு விடுகிறேன்."

இதை நொண்டி கேட்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை. அவன் தன் சிந்தனையிலேயே மூழ்கி யிருந்தான். பிறகு இருந்திருந்தாற்போல், "ஆமாம்; இது மிகவும் வெட்கக்கேடான விஷயம்! இரண்டு புருஷர்களும் உயிரோடிருக்க நீ ஏகாங்கியாக வாழ்வதாவது! ஆகையால்..." என்று ஏதோ சொல்ல ஆரம்பித்தான்.

"நீ பேசாமல் இருக்கப் போகிறாயா இல்லையா! நீ இங்கே இருந்துதான் ஆகவேண்டும். நான் நேரே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகிறேன்..." என்றான் மற்றவன்.

"இந்த மாதிரி ஒரு நிகழ்ச்சி ஏற்படவே சம்மதிக்க மாட்டேன். கொலைசெய்தவன் நானிருக்க, நீ எதற்காக ஜெயிலுக்குப் போகவேண்டும்!" என்று நொண்டி ஒரே கோபத்தில் கத்தினான்.

நவல் ஏற்கெனவே ஒரே குழப்பத்தில் மூழ்கியிருந்தாள். இந்த விசித்திரச் சண்டை அவளை இன்னும் கலவரப்படுத்தியது. "நீங்கள் இரண்டு பேரும், உங்கள் தலைகளைக் கொண்டுபோய் எங்கேயாவது முட்டிக் கொள்வதுதானே!" என்று முணுமுணுத்துவிட்டு, அழுதுகொண்டே கதவைச் சாத்திக் கொண்டு வீட்டுக்குள்ளே சென்றாள்.



இதற்குள் அத்தை அந்த இடத்துக்கு வந்து சேர்ந்தாள். "முட்டாள்களா, சீக்கிரம் ஓடுங்கள்! போலீஸ்காரர்கள் நீங்கள் வந்திருக்கும் துப்பு கிடைத்தால் போதும், பிடித்துக் கொண்டு போய் விடுவார்கள். நவலை இது விஷயமாகக் கேட்பதில் அர்த்தமே இல்லை. நீங்களே ஏதாகிலும் ஒரு தீர்மானத்துக்கு வந்து அதன்படி காரியம் செய்யுங்கள். புண்ணியமாகப் போகிறது. எதைச் செய்வதாகத் தீர்மானித்தாலும் உடனே செய்யுங்கள்! உடனே காரியத்தில் இறங்குங்கள்"

என்று கூறிவிட்டு, வீட்டுக்குள்ளே போய்த் தடால் என்று கதவைச் சாத்தினாள். அது, 'இவ்விடத்தை விட்டு உடனே வெளியேறுங்கள்' என்று கட்டளையிட்டாற் போலிருந்தது!

★

அந்த இருவரும் போகும் வழியெல்லாம் யார் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று சரணாகதியடைய வேண்டும் என்பது பற்றிச் சர்ச்சை செய்து கொண்டே போனார்கள். சர்ச்சை, பேச்சு என்று வந்தால், நொண்டியினால் சமாளிக்க முடியாது. ஆகவே, நவலினுடைய முதல் கணவன், நொண்டிதான் நவலுக்கு வாழ்க்கையில் சந்தோஷமளிக்க முடியும்; ஆகவே அவன் உயிருடன் வாழவேண்டியது மிகவும் அவசியம் என்று கூறினான். ஆனால் அன்றிரவே போலீஸ்காரர் வந்து அவ்விருவர்களையும் கைது செய்து கொண்டு போனார்கள். இப்படிக் கைது செய்து அழைத்துச் செல்லப்பட்ட காட்சியை நவல் தன் வீட்டுத் தாழ்வாரத்திலிருந்து அமைதியாக பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு, சற்று நேரங் கழித்துத் தீரா மனக்கசப்புடன், "இவர்கள் விலங்கு மாட்டிக் கொள்ளும் அற்புதக் காட்சியை நான் பார்க்கவேண்டும் என்பதற்காக இவ்வளவு பாடு பட்டிருக்கிறார்கள். இல்லையா, அத்தை!" என்றாள் நவல்.

ஆமாம், அவள் உள்ளத்தில் பொங்கிவந்த துக்கத்தை யெல்லாம் கொட்டிவிடப் பிரயாசைப் பட்டாள். ஆனால் அவளால் அதற்குமேல் ஒன்றும் சொல்ல முடியவில்லை. ஆனால் அத்தை இவர்கள் கைதானதைக் கண்டு மிகுந்த திருப்தியடைந்தவள் போல் காணப்பட்டாள். 'இந்த இருவர்களில் யாராவது ஒருவர் நவலிடம் இனி வந்து சேர்ந்து விடுவார்களல்லவா!' என்று நினைத்தாள். பிறகு ஒரு விபரீதமும் நிகழ்ந்து விட வில்லை என்று சொல்லும் பாவனை தொனிக்க, "அதனால் என்ன! இத்தனை நாளும் தங்கள் வயிற்றுச் சோறுக்காக ஒவ்வொரு வீட்டு வாசற்படியாக ஏறியிறங்க வேண்டியிருந்தது. இனி அந்தக் கஷ்டம் கிடையாது. 'ஜெயசீதாராம்' என்று சொல்ல வேண்டியதில்லை ஜெயிலில் வேளா வேளைக்குச் சோறு கிடைத்துவிடும்" என்றாள்.

நவலுக்கு விஷயம் அவ்வளவு சுலபமானதாகத் தோன்றவில்லை. ஒரே குழப்பமாக இருந்தது! கடவுள் கொடுத்த இரு கண்களில் யாரால்தான் மனசறிந்து ஒரு கண்ணைக் குத்திக்கொள்ள முடியும்! ஆகவே, போலீஸ் கோர்ட்டில் இவர்களைப்பற்றி நவலிடம் விசாரித்தபோது அவள், இவர்கள் யாரென்றே தனக்குத் தெரியாது என்று சாதித்து விட்டாள்.

நியாயஸ்தலத்தில் முதல் கணவன், பாவம், தன் பேச்சுத் திறமையினால், நொண்டியை வாயெடுக்க வொட்டாமல் செய்து, பழியைத் தன் மீது ஏற்றுக் கொண்டு, ஆயுள் தண்டனை அடைந்தான். நொண்டிக்கு ஆறு மாத சிறைவாசம் கிடைத்தது.

★

ஆறு மாதம் கழிந்தது. நொண்டி விடுதலை பெற்று நவலின் வீட்டுக்கு வந்தான். அவனைப் பார்த்தவுடனேயே அவள் உள்ளத்தில் சொல்லொணா வேதனை உண்டாயிற்று. 'இத்தனை நாளும் நாம் அந்த ஆயுள் தண்டனையைப் பெற்றவனையல்லவா அந்தரங்கமாக நேசித்துக் கொண்டிருந்தோம்' என்ற உண்மை அவளுக்குப் புரிந்தது. இந்த நொண்டியிடம் ஒரு நாள் கூட அன்பு செலுத்தியது கிடையாதே என்று நினைத்தாள். முதல் கணவனுடைய ஊதாரித்தனம், சோம்பேறித்தனம், வாயாடித்தனம் அத்தனையுமல்லவா அவளுக்கு ரொம்பவும் அழகான நற்குணங்களாகத் தோன்றியது! இதை நினைக்க நினைக்க அவளுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டுவந்தது. கண்கள் கண்ணீர் உகுக்கத் தொடங்கி விடும் என்று தோன்றியதும் இடுப்பில் குடத்தை எடுத்து வைத்துக் கொண்டு வர்தாக் நதிக்கரைக்குப் போய் விட்டாள். அங்கே தன் இதயபாரம் குறைய அழுது தீர்த்தாள். அந்த அழுகையி னிடையே, 'இரக்கமற்ற பெண் பிசாசே! உன் முதல் கணவன் சிறு வயதிலிருந்தே தன்னந் தனியனாக இருந்திருக்கிறான், பாவம்! எட்டு வருஷம் கழித்து இப்பொழுது உன்னிடம் வந்தான். அப்படி வந்தவனை எப்படி இருக்கிறான், ஏதாக இருக்கிறான் என்று இரண்டொரு கேள்வி கூடக் கேட்கத் துப்பில்லை உனக்கு!' என்று தன்னைத்தானே நொந்து கொண்டாள்.

பாவம், துரதிர்ஷ்டம் பிடித்தவன் அந்த நொண்டி! வர்தாக் நதிக் கரையிலே அவள் அழுது கொண்டிருக்கிறாள் என்று தெரிந்திருந்தால் அவன் அவளைத் தேடிக் கொண்டு வந்திருப்பானா! அவன் நவல் தனியாக இருக்கும்போது, தான் அந்தக் கொலைக் குற்றத்தை ஏற்க முயன்றதும், அதற்குச் சற்றும் இடம் தராமல் மற்றவன் பேசிப் பேசிக் காரியத்தைக் கெடுத்ததும்தான் சொல்ல விரும்பினான். அவன் துணைவன் தன் நாவன்மையால் குற்றத்தைத் தன் மேல் சுமந்து கொண்டு ஜாண்டிக்கு 'அது வெறும் பொய்' என்று கூறச் சந்தர்ப்பமளிக்காததையும் சொல்ல ஆசைப் பட்டான். மேலும் தன் நொண்டிக் கால் வேறு; தான் குற்றம் செய்திருக்க மாட்டான் என்ற எண்ணத்திற்குச் சாதகமாக இருந்தது!

அந்தோ பரிதாபம்! நவல் இவனுடைய வார்த்தைகளைக் கேட்கும் மன நிலையில் கொஞ்சங்கூட இல்லை; அந்த நொண்டிக்கும் அவள் மனம் மாறும் வரை காத்திருக்கும் பொறுமை இருக்க வில்லை. ஆம், அவன் எந்த நம்பிக்கை கொண்டு காத்திருப்பான்! மூன்று வருஷங்களுக்கு முன் நவல் அழுது பிரலாபித்தது அவனை மூளையிழக்கச் செய்து பெரிய கொலையைச் செய்ய வைத்தது. இப்பொழுதைய பிரலாபம், அவனுடைய உயிருக்கும் உடலுக்குமே உலையை வைத்து விடும்போல் தோன்றியது. அவன் சற்றுத் துணுக்குற்று நின்றான். ஆம், அவனுடைய இன்னொரு காலும் நொண்டியாகி விட்டாற்போல் தோன்றியது! பச்சிளம் குழந்தையை ஓங்கி அறைந்து விட்ட ஒருவன் மனம் என்ன பாடு படுமோ அப்படி வேதனைப் பட்டான். "ஆகா! என்ன கஷ்டம் இது! கஷ்டங்களில் எல்லாம் பெரிய கஷ்டமாக அல்லவோ தோன்றுகிறது! நான் என்ன காரியம் செய்தேன்! என் தவறை நிரூபிக்க முடியாமற் போனது போன்ற பெரிய தவறு ஒன்று இருக்க முடியாது! என் முட்டாள் தனத்தினால் இந்தப் பெண் நரக வேதனை யல்லவா அடைகிறாள்! இது என்ன கஷ்டம்!" என்று என்ன என்னவோ தன் மனசுக்குள்ளே புலம்பினான்.

கடைசியாகத் தான் செய்த மாபெரும் பாதகத்துக்குப் பிராயச்சித்தமாக, அங்கிருந்த கல்லுக்கும் செடிக்கும் புல்லுக்கும் நெடிய வணக்கம் செலுத்தி விடை பெற்றுக் கொண்டு நொண்டி, நொண்டி நொண்டி நொண்டிக் கொண்டே அந்த இருட்டைப் பிளந்துகொண்டு போனான்!


ஷாலிமார் தயாரிப்புகளை
ஆர்டர் செய்யும்போது
எந்த வேலைக்காக என்பதை
தெரிவிக்கவும்.
ஓர்
அழகு ஊட்டி
அதிககால
உழைக்கவல்ல
வர்ணப்பூச்சு
எனுமல் பெயின்டைப் போன்ற
பிரகாசமுள்ள ஷாலிமார் வுட்
கோட் உடனே உபயோகிக்கும்
படியாக கரைத்து வைக்கப்பட்
டுள்ள ஓர் பெயின்ட். நீடித்த
காலம் உழைக்கவல்லது.
எல்லாவிதமான கட்டட உட்புற
வெளிப்புற மரவேலைகளுக்கும்
உகந்தது. 32 வர்ணங்களில்
கிடைக்கும்.
அடித்தாற் போல் சொல்லுங்கள்
ஷாலிமார்
வுட் கோட்
பல வேலைகளுக்கு பூர்த்தியளிக்கும் பெயின்ட்
SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,
Post Box 136, Madras 1. Importers & Distributors for Ceylon:
Lewis Brown & Co., Ltd., Post Box 85, Colombo




நவராத்திரி ஆரம்பமாகிவிட்டது. வீட்டுக்கு வீடு பொம்மைக் கொலு வைப்பார்கள்.

நான் சிறுவனாய் இருந்தபொழுது நவராத்திரி சமயத்தில் வீட்டில் கொலு வைப்பதில் எனக்கு ஆசை இருந்தது. இப்பொழுதெல்லாம் எனக்கு அது ஒரு அர்த்தமற்ற விளையாட்டுப் போலத்தானிருக்கிறது. என்னுடைய விருப்பு வெறுப்பை லட்சியம் செய்கிறவர்கள் யார்? என் தங்கை கொலு வைத்துத்தானாகவேண்டுமென்று பிடிவாதம் பிடித்தாள். தாயாருக்கும் அதில் சிறிது ஆசை இருந்தது. இதனால் எனக்கு வீட்டில் இரண்டு நாள் வேலை இடுப்பை முறித்து விட்டது. பரண்மீதிருந்து பொம்மைப் பெட்டிகளை எடுப்பது, கொலுப்படிகள் கட்டுவது, காகிதத்தைக் கத்தரித்து ஒட்டுவது போன்ற வேலைகளெல்லாம் என் தலையில் தான் விழுந்தன.

கொலுப் பொம்மைகள் வைத்திருந்த பெட்டிகளில் ஒன்றைத் திறந்தேன். முதலில் என் கண் பார்வையில் பட்டது, ஒரு ஜோடி மரப்பாச்சி. ஒன்று ஆண், ஒன்று பெண். அவைகள் சுமார் ஒன்றரை அடி உயரமிருக்கும். சிறந்த வேலைப்பாடுகளுடன் கருங்காலி மரத்தால் செய்யப்பட்டவைகள். அவைகள் இரண்டையும் எடுத்துக் கீழே வைத்தேன். ஆண் உருவிலுள்ள மரப்பாச்சி எவ்வித அங்கச் சிதைவும் இல்லாமல் ஒழுங்காகத்தான் இருந்தது. ஆனால் பெண் மரப்பாச்சிக்கு ஒரு கை உடைந்து மூளியாய் இருந்தது. இதைக் கண்டதும் எனக்குத் திக்கென்றிருந்தது. எங்கள் வீட்டில் நவராத்திரியின் போது கொலு வைத்துப் பத்து வருஷத்திற்கு மேலாகிறது. பத்து வருஷங்களுக்குப் பிறகு இந்த வருஷம்தான் என் தாயார் கொலு வைக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்து அதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினாள்.



பத்து வருஷங்களுக்குப் பிறகுதான் அந்தக் கை யொடிந்த மரப்பாச்சியை மறுபடியும் பார்க்கிறேன். அதைப் பார்த்ததும் எனக்குப் பத்து வருஷங்களுக்கு முன் நடந்த ஒரு நிகழ்ச்சி ஞாபகத்திற்கு வந்து மனத்தை வாட்டத் தொடங்கியது.

வீட்டில் கொலு வைத்தாகி விட்டது. இதனால் என் தங்கை ரேவதிக்கு ஏற்பட்ட குதூகலத்திற்கும் சந்தோஷத்திற்கும் ஒரு எல்லையே இல்லை. ஆனால் அந்தக் கை யொடிந்த மரப்பாச்சியைப் பார்த்த பின் என் மனம் நிம்மதி இழந்திருந்தது. அந்தக் கை யொடிந்த பெண் மரப்பாச்சி கொலுவில் கடைசிப் படியில் ஆண் மரப்பாச்சியுடன் அலங்காரம் செய்யப்பட்டு வைத்திருந்தது. என் தங்கை பட்டுத் துணிகளைச் சுற்றி அந்த மரப்பாச்சியின் மூளிக் கையை ஒருவிதமாக மறைத்திருந்தாள். புதிதாகக் கல்யாணம் செய்து கொண்ட இளம் தம்பதிகளை அலங்கரிப்பது போல்தான் அந்த மரப்பாச்சிகளுக்கும் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது.

எப்படி அலங்காரம் செய்யப் பட்டிருந்தால் என்ன? மூளி மரப்பாச்சி மூளி மரப்பாச்சிதானே? மூளி மரப்பாச்சியானாலும் அதைத் தள்ளிவிட மனமில்லை. அதையும் அலங்காரம் செய்து பொம்மையோடு பொம்மையாகக் கொலுவில் வைத்து விட்டனர். அந்தக் கையொடிந்த பெண் மரப்பாச்சியை அந்த ஆண் மரப்பாச்சியும் ஏற்றுக் கொண்டுதானிருக்கிறது. 'உனக்குக் கை யொடிந்து விட்டது. என்னோடு வாழ்க்கை நடத்த யோக்யதை இல்லை' என்று சொல்லி உதறிவிடவில்லை. அந்த ஆண் மரப்பாச்சிக்கு மனிதத் தன்மைக்கு மீறிய பெருந்தன்மையோடு மட்டுமல்ல, தன் சகதர்மிணியிடம் அசாத்தியக் காதலும் பற்றுதலும் இருந்திருக்கத்தான் வேண்டும். ஆனால் பிறவியிலேயே உயர்ந்த பிறவியாகச் சொல்லிக் கொள்ளும் மனிதர்களிடத்தில் இத்தகைய பெருந்தன்மையும் பற்றுதலும் இருக்கிறதா? உதாரணமாக என்னையும் அலமுவையும், எடுத்துக் கொண்டாலே போதும்.

அந்த மரப்பாச்சியின் கையை ஒடித்தவள் அலமு. அதற்காக அலமுவின் கையை ஒடித்தவன் நான். அந்தப் பெண் மரப்பாச்சி கையொடிந்து மூளியானதற்காக அவ்வளவாக மதிப்பிழந்து ஒதுக்கித் தள்ளி வைக்கப் படவில்லை. ஆனால் அலமு

வின் வலது கைமூட்டு நழுவிச் சுவாதீனமற்றுப் போனதற்காக உலகத்தில் பெண்மைக்குள்ள சகல லக்ஷணங்களையும் இழந்துவிட்டவள்போல் தள்ளி வைக்கப்பட்டிருக்கிறாள். அவளுடைய கையை ஒடித்ததற்குக் காரணமானவன் மாத்திரம் நானல்ல. அவள் கையொடிந்தவள் என்பதற்காகத் துளிக்கூட இரக்கமோ, பெருந்தன்மையோ பாசமோ இல்லாமல் அவள் வாழ்வைச் சூன்யமாக்கி விட்டவனும் நான்தான். நான்தான் அவளுடைய கணவன்.

அப்பொழுது எனக்கு வயது பதினைந்து; அலமுவுக்கு வயது பத்து. என்னுடைய தகப்பனாரும் அவளுடைய தகப்பனாரும் ஒரே பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்கள். நெருங்கிய நண்பர்கள். ஒரே தெருவில் குடியிருந்ததினால் இரண்டு குடும்பத்திற்கும் மிகவும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்தது. எனக்கும் அலமுவுக்கும் குழந்தைப் பருவத்திலிருந்து நட்பு. இரண்டு குடும்பங்களும் நெருங்கிப் பழகிய தோஷத்தால் எனக்கும் அலமுவுக்கும் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டுமென்ற ஆசை அவர்களுக்கு ஏற்பட்டது அதிசயமா? அலமுவின் வயதான பாட்டிக்குத் தான் இறப்பதற்குள் தன் பேத்தியைக் கல்யாணப் பந்தலில் புருஷனோடு நிறுத்திப் பார்த்துவிட்டுச் சாக வேண்டுமென்ற ஆசை. என்னுடைய அத்தையும் எனக்கு உடனே கல்யாணம் செய்து பார்க்க வேண்டுமென்று துடித்தாள். எப்படியோ அவர்கள் ஆசை நிறைவேறி விட்டது. சரியான உலக அனுபவம் ஏற்படுவதற்கு முன்னால் நானும் அலமுவும் புருஷன் மனைவியாகி விட்டோம்.

அலமு முக்கால் வாசி நேரம் எங்கள் வீட்டில் தானிருப்பாள். எங்களுக்குக் கல்யாணமாகிய அந்த வருஷம் நவராத்திரியை மிகவும் விசேஷமாகக் கொண்டாட நினைத்தாள் என் தாயார். புதிது புதிதாக பொம்மைகள் வாங்கிக் கொலு வைத்தார்கள். அலமுவுக்கும் எனக்கும் அப்பொழுது இருந்த சந்தோஷத்திற்கு அளவேயில்லை.

ஒருநாள் அலமு மாடிப் படியில் உட்கார்ந்து பெண் மரப்பாச்சிக்கு ஏதோ அலங்காரம் செய்துகொண்டிருந்தாள். என்னைக் கண்டால் கணவன் என்ற மரியாதைக்காக எழுந்து நிற்க வேண்டுமென்று வீட்டில் உத்தரவிடப் பட்டிருந்தது. அவள் மரப்பாச்சிக்கு அலங்காரம் செய்துகொண்டிருந்த பொழுது நான் திடீரென்று அவள் எதிரில் போய் நின்றதால் அவள் பரபரப்போடு எழுந்து நின்றாள். அவள் எழுந்து நின்ற வேகத்தில் அவள் கையிலிருந்த மரப்பாச்சி நழுவி மாடிப்படியிலிருந்து உருண்டு கீழே விழுந்தது. நான் சட்டென்று பாய்ந்து அந்த மரப்பாச்சியை எடுத்தேன். அதன் கை ஒடிந்து துண்டாகக் கீழே விழுந்திருந்தது. எனக்கென்னவோ அந்தச் சமயம் என்னையறியாமல் கோபம் வந்துவிட்டது. "மரப்பாச்சியை இப்படிக் கீழே தள்ளிக் கையை உடைத்துவிட்டாயே! உன்னையும் அப்படிக் கீழே தள்ளிவிட்டால்......" என்று சொல்லி அவள் தோளைப் பிடித்துத் தள்ளினேன். மரப்பாச்சி எப்படி உருண்டு கீழே விழுந்ததோ அப்படித்தான் அவளும் மாடிப் படியிலிருந்து உருண்டு கீழே விழுந்தாள். பாவம்! மரப்பாச்சிக்கு அழத் தெரியவில்லை. அலமு 'ஓ'வென்று கதறி அழுதாள். வீட்டிலுள்ளவர்களெல்லாம் கூடி விட்டனர். அலமு மாடிப் படியிலிருந்து மரப்பாச்சியுடன் தவறி விழுந்து விட்டதாக நான் சாதித்தேன். அலமு நான்தான் அவளைக் கீழே தள்ளி விட்டதாகச் சாதித்தாள். அலமுவின் வார்த்தைகள் ஒருவர் காதிலும் ஏறவில்லை. 'அதற்குள்ளேயே புருஷன் மீது வீண் பழி சுமத்த ஆரம்பித்து விட்டாள்' என்ற கெட்ட பெயர் தான் அவளுக்கு ஏற்பட்டது. மாடிப் படியிலிருந்து உருண்டு விழுந்ததன் காரணமாக அந்த மரப்பாச்சிக்கு எப்படிக் கை முறிந்ததோ அப்படியே அலமுவுக்கும் வலது முழங்கை மூட்டு நழுவிவிட்டது. இதனால் வீட்டுக் காரியங்கள் செய்யத் தகுதி இல்லாதவளாகி விட்டாள்.



இதெல்லாம் குழந்தைப் பருவத்தில் ஏற்பட்டது. புருஷன் மனைவி என்ற தாம்பத்ய உறவு பலம் பெறாதபோது. உள்ளத்தில் சரியான பற்றுதலும் தெளிவும் ஏற்படாத போது ஏற்பட்ட விபரீதம். அறிவு பக்குவப்படாத நிலையில் ஏற்பட்ட இந்த நிகழ்ச்சி பின்பு விபரீதமாக முடியும் என்று நான் நினைக்கவில்லை. அந்த வயதில் எதையும் தீரத் தெளிய நினைத்துப்பார்த்து முடிவு கட்டும் நிலையிலும் நான் இல்லை. எல்லாம் என் பெற்றோர்களுக்கு உட்பட்ட விஷயங்களாகி விட்டன. கை ஒடிந்த பெண் குடும்பத்திற்குப் பயன்பட மாட்டாள் என்றுசொல்லி என் பெற்றோர்கள் அவளை வீட்டுக்கு அழைக்க மறுத்து விட்டனர். அலமு அன்று போனவள்தான்.

பத்து வருஷங்கள் பறந்தோடி விட்டன. நானும்

பூரண அறிவுள்ள வாலிபனாகி விட்டேன். ஒன்றையும் நான் மறந்து விடவில்லை. ஒவ்வொன்றையும் சிந்தித்து நன்மை தீமைகள் எதுவென்று அறியும் ஆற்றல் எனக்கு இப்பொழுது ஏற்பட்டிருக்கிறது. நான் செய்த தீமைகளையும் அதனால் ஏற்பட்ட விபரீதங்களை எண்ணிப் பார்த்துப் பச்சாதாபப்படும் நிலைமை இப்பொழுது ஏற்பட்டு விட்டது. அதுவும் பத்து வருடங்களுக்குப் பிறகு என் வீட்டில் நவராத்திரி கொலு வைத்த போது, அந்தக் கை மூளியான மரப்பாச்சியைப் பார்த்தபின் என்னுடைய மனப் போராட்டம் அதிகமாகி விட்டது. ஒன்றிலுமே பற்றுதலில்லாத பித்தனைப்போல் இருந்தேன். கை மூளியான மரப்பாச்சியும் அலமுவும் தான் மாறி மாறி என் நினைவில் தோன்றி வாதனை செய்து கொண்டிருந்தனர்.

கொலுவில் கீழ்ப்படியில் ஆண் மரப்பாச்சியோடு கைபோன பெண் மரப்பாச்சியும் வைக்கப்பட்டிருந்தது. எனக்கு அது அங்கே தன் ஜோடியோடு சேர்ந்திருப்பது பிடிக்கவில்லை. என் தங்கைக்குத் தெரியாமல் அந்தப் பெண் மரப்பாச்சியை மாத்திரம் எடுத்து ஒரு மறைவான இடத்தில் ஒருவர் கண்ணிலும் படாமல் ஒளித்து வைத்து விட்டேன். இந்த அர்த்தமற்ற செய்கை எனக்குச் சிறிது ஆறுதலை அளித்தது.

கொலுவிலிருந்த பெண் மரப்பாச்சி திடீரென்று காணமற் போனதைக் கண்டு என் தங்கை துடியாகத் துடித்தாள். வீடு முழுவதும் தேடினாள்.

"ஏண்டா! கொலுவில் வைத்திருந்த பெண் மரப்பாச்சியைக் காணோமே! நீ பார்த்தாயா?" என்றாள் தாயார்.

நான் பளிச்சென்று பதில் சொல்லத் தடுமாறினேன். இருந்தாலும் நெஞ்சில் துணிவை ஏற்படுத்திக்கொண்டு "ஒரு நல்ல மரப்பாச்சிக்கு இணையாக ஒரு மூளி மரப்பாச்சியை வைத்தால் லட்சணப்படுமா, அம்மா? அது கை ஒடிந்த மரப்பாச்சிதானே? போனால் போகிறது!" என்றேன்.

"கை மூளியாய் இருந்தாலென்ன? மற்ற லட்சணத்திலெல்லாம் அது குறைந்து விட்டதா? அதற்குத்தான் நம்ம ரேவதி சட்டை, பாவாடை எல்லாம் கட்டிக் கை மூளியை மறைத்து விட்டாளே......?" என்றாள் என் தாயார்.

"ஏன் அம்மா! அலமுவுக்குக் கீழே விழுந்ததில் கைஎலும்புதானே நழுவி விட்டது? அவளுடைய மற்ற லட்சணங்களெல்லாம் குறைந்து விட்டதா? அவளை ஏன் நீ தள்ளி வைத்திருக்கிறாய்? அதைப்போலத் தான் இதுவும் மரப்பாச்சி என்றால் ஒரு சட்டம், மனிதர் என்றால் ஒரு சட்டமோ?" என்றேன்.

இப்படி என் தாயாரோடு பேசுவதற்கு என்னையறியாமலேயே எனக்கு அப்பொழுது எப்படியோ துணிவு ஏற்பட்டது. என் தாயார் என்னைச் சுட்டு விடுவதுபோல் பார்த்தாள். "அந்தப் பெண் நீ அவளை கீழே தள்ளிக் கையை முறித்து விட்டதாகப் பழி சுமத்தினாளே!" என்று சீறினாள்.

"அவள் என் மீது பழி சுமத்தவில்லை. அவள் சொன்னது உண்மைதான். அவள் மரப்பாச்சியைக் கைதவறிக் கீழே போட்டு உடைத்தாள் என்பதற்காக நான்தான் அவளை ஆத்திரத்தில் மாடிப் படியிலிருந்து கீழே தள்ளி விட்டேன்" என்று சொல்லி விட்டு மாடிக்குப் போய்விட்டேன்.

அன்று சாயந்திரம் நான் ஆபீஸிலிருந்து வீட்டுக்குத் திரும்பிய பொழுது எங்கள் வீட்டுத் தாழ்வாரத்தில் பெண்கள் கூடியிருந்தனர். யாரோ ஒரு பெண் பாடிக் கொண்டிருந்தாள். என் தங்கை ரேவதி வந்து வழி மறித்து "அண்ணா! இப்போபாடுகிறாளே யார் தெரியுமா?" என்றாள்.

"தெரியாதே!" என்றேன் நான்.

"மதனி...அவளை நான் போய் அழைத்துக் கொண்டு வந்து விட்டேன். அந்த மரப்பாச்சியை எங்கே ஒளிச்சு வைச்சிருக்கே? மதனிதான் வந்து விட்டாளே! இனிமேல் அதை எடுத்துக் கொடுத்துவிடு" என்றாள்.

எனக்கு இந்தச் செய்தி ஆச்சரியமாக மட்டுமில்லை; ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாயும் இருந்தது.

மூளி மரப்பாச்சி தன் ஜோடி மரப்பாச்சியுடன் உன்னதமாகக் கொலுவிருந்தது. என் மனைவி அலமுவும் அன்றைய தினத்திலிருந்து என் மனப் பீடத்தில் கொலு விருந்தாள்.




கமலா

## 2. புவனா எங்கே?

பூபதியும் புவனாவும் சுமார் முக்கால் மணி நேரம் ஓடின பிறகு தூரத்தில் மூணுக் மூணுக்கென்று ஒரு சின்ன தீப வெளிச்சம் தெரிந்தது. உடனே களைப்பையும் பாராது மேலும் ஓடினார்கள். கடைசியாக அந்த வெளிச்சம் இருந்த இடத்தை அடைந்தனர்.

அது வழிப்போக்கர் தங்கும் சத்திரமானதால் சத்திரத்தின் திண்ணையில் பிச்சைக்காரர்கள் சிலர் தங்கி இருந்தனர்.

அங்கே போனதும், புவனா பூபதியின் காதோடு "அண்ணா, அவர்களைப் பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறது!" என்றாள்.

பூபதிக்கும் உள்ளூறப் பயமாக இருந்தாலும் "சீ, அசடே எதுக்குப் பயம்? அவர்களும் நம்மைப் போல் மனிதர்கள்தானே!" என்று தைரியம் சொன்னான்.

பசியாலும், பயத்தாலும், களைப்பாலும் அவர்கள் உட்கார்ந்த இடத்திலேயே சுருண்டு படுத்து, ஐந்து நிமிஷத்திற்குள்ளாகவே அயர்ந்து தூங்கி விட்டனர்.

"ஏலே! அடே காத்தான்! ஏ வீரய்யா!" என்பதாகப் பலவிதமான கூச்சலுண்டாகவே தூக்கம் கலைந்து திடுக்கிட்டு எழுந்த பூபதி திண்ணையினின்றும் கீழே இறங்கினான். சிலர் தெருவோடு போவதையும், இரண்டொருவர் திண்ணை மீதே கொட்டாவி விட்டபடி உட்கார்ந்திருப்பதையும் கண்டு கண்ணைக் கொட்டிக் கொட்டி விழித்துப் பார்த்தான். உடனே அவனுக்குத் தானும் புவனாவும் அத்திண்ணையில் வந்து படுத்தது நினைவுக்கு வந்தது. உடனே பக்கத்தில் படுத்திருந்த புவனாவைத் தேடினான். அந்த நீண்ட இரு புறத்துத் திண்ணையிலுமே புவனாவைக் காணவில்லை. பூபதியின் மனம் பகீரென்றது. "புவனா! புவனா!!" என்று தொண்டை கிழியக் கத்தினான். ஆனால் அவனது அருமைத் தங்கை புவனா ஏனென்று கேட்கவில்லை.

எப்படிக் கேட்பாள்? அவள்தான் அங்கு இல்லையே!

புவனா எங்கு போனாள்?

அவள் கதி என்ன ஆயிற்று?

பூபதியின் கத்தலையும், பரபரப்பையும் பார்த்து "ஏண்டா கூச்சல் போடுகிறாய்?" என்று ஒரு முரடன் அதட்டினான்.

அப்பொழுது ஒரு வண்ணான் இரண்டு பெரிய துணி மூட்டைகளைத் தூக்க முடியாமல் சிரமத்தோடு தூக்கிக் கொண்டு வந்து, அந்தச் சத்திரத்துத் திண்ணையின் மேல் இறக்கிவிட்டு, சற்றுக் களைப்பாறினான்.



அவன் அழுமூஞ்சியாய் மூலையில் உட்கார்ந்திருக்கும் பூபதியைக் கண்டு, "ஏ பையா, இதில் ஒரு மூட்டையை என்னோடு தூக்கிக் கொண்டு வந்தால் காலணாத் துட்டுத் தருவேன். வருகிறாயா?" என்றான்.

புவனா காணாமற் போய்விட்டாளே. இனி நாம் இங்கிருந்து தான் என்ன பிரயோஜனம்? இந்த வண்ணானுடன் மூட்டை சுமந்து சென்றாலாவது வேறிடம் போகலாம், ஒரு வேளை அவளையும் கண்டு பிடிக்

கலாம் என்று எண்ணினவனாய் "அது பெரிய மூட்டையாயிருக்கிறதே! கூலி மட்டும் அவ்வளவு சின்னதாகச் சொன்னால் எப்படித் தூக்குவேன்?" என்று வண்ணானைப் பார்த்துச் சொன்னான்.

அதற்கு வண்ணான் சற்றுச் சிரித்துவிட்டு "சரி பையா, இன்னும் கொஞ்சம் சேர்த்துத் தருகிறேன். மூட்டையைத் தூக்கிக் கொண்டு வா!" என்றான்.

வண்ணான் ஒரு பெரிய மூட்டையைத் தூக்கிப் பூபதியின் முதுகில் ஏற்றிப் புஜத்தைச் சேர்த்து மார்பு பக்கத்தில் முடிந்து கடக்கச் செய்து தானும் ஒரு மூட்டையை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

பாவம்! தனது விசனத்தையும் பசியையும் பொறுத்துக் கொண்டு அந்தப் பெரிய மூட்டையைச் சுமக்க முடியாமல் சுமந்தபடி அந்த வண்ணானுடன் பூபதி போனான்.

வண்ணானுடன் துணி மூட்டையைச் சுமந்து கொண்டு போன பூபதி மூன்று மணி நேரம் சுமை தூக்கிக் கொண்டு தெருத் தெருவாக அலைந்தபின் வண்ணானுடைய வீட்டை அடைந்து சுமையை இறக்கினான்.

மூட்டைகளை உள்ளே வைத்து விட்டுவந்த வண்ணான் "ஏ பையா, இந்தா உன் கூலி" என்று எட்டணாவை விட்டெறிந்து விட்டு "ஏண்டா, என்னிடமே துணிமணி எடுத்து வர உதவியாக இருந்து வாயேன். நீ வேலை செய்யும் தினத்திலே எட்டு அணா கண்டிப்பா சம்பாதித்து விடலாமே" என்றான்.

பூபதி என்ன பதில் சொல்லுவது என்று புரியாமல் விழித்தான். பிறகு எப்படியும் நாம் ஏதாகிலும் சம்பாதித்தால் தானே வயிற்றுக்குச் சாப்பிட முடியும் என்ற எண்ணம் வரவும் "சரி, செய்கிறேன். ஆனால் எனக்குப் பசிக்கிறதே!" என்றான்.

"பசித்தால் உன்னிடம் தான் துட்டு இருக்கிறதே, சாப்பாட்டுக் கடையில் ஏதாவது வாங்கிச் சாப்பிடு" என்றான் வண்ணான்.

பிறகு பூபதி கடைத்தெருப் பக்கம் சென்று சாப்பாட்டுக் கடையில் சாப்பாட்டை முடித்துக் கொண்டான். அந்தச் சாப்பாட்டுக் கடையிலேயே அன்று இரவும் தங்கி விட்டான்.

மறுதினம் காலையிலெழுந்து முதல்நாள் வேலை பார்த்த வண்ணான் வீட்டிற்கே சென்று அவனோடு மூட்டையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டான்.

இருவரும் சென்று பத்து வீடுகளில் துணிகளை எடுத்து இரண்டு மூட்டையாகக் கட்டி இருவருமாகத் தூக்கிக்கொண்டு வீடு திரும்பினார்கள். வண்ணானும் எட்டணாக் கூலியைப் பூபதியிடம் கொடுத்தான். பூபதியும் வாடிக்கைக் கடையில் சென்று சாப்பிட்டுப் பொழுது போக்கினான். அவ்விதமே சில நாட்கள் செல்ல பூபதிக்குச் சாப்பாட்டுக் கடையிலுள்ள சோமன் என்பவன் நல்ல சிநேகிதன் ஆகிவிட்டான். அவனுடன் ஊர் அக்கப்போர்களையும், ஜாலபுரியின் விசேஷங்களையும் விசாரித்துக் கொண்டிருப்பான்.

ஒருநாள் சோமன் ஜாலபுரியைப் பற்றிச் சொல்லுகையில், "ஜாலபுரியின் இப்போதைய அரசன் பட்டத்துக்கு வந்து சிறிது நாட்கள் தானாகிறது. அந்த அரசனுக்கும் சின்ன வயதுதான். அதனால் ஜாலபுரியின் நிர்வாகமெல்லாம் மந்திரி ஜம்புலிங்கத்தினுடையதுதான்! ஜம்புலிங்கம் பெரிய அரசன் இருந்தபொழுதே மந்திரி பதவி வகித்து வந்தவர். அரசியல் நிர்வாகத்தில் ரொம்பவும் கெட்டிக்காரர். பழைய அரசரும் அசாத்யக் கெட்டிக்காரராக இருந்தார். இப்பொழுது இருக்கும் அரசனுக்கு அவ்வளவு அநுபவம் போதாது. ஜம்புலிங்கம் அரசியல் விஷயத்தில் சாமர்த்தியசாலி. அரசன் அமரேசனும் அவனது தாயார் ராணியும் மந்திரியின் வாக்குக்கு எதிர்வாக்கே சொல்ல மாட்டார்கள். ஜாலபுரி உண்மையில் சொல்லப் போனால் மந்திரியின் ஆட்சியில்தான் நடைபெறுகிறது" என்றான்.

அதோடு அந்த சம்பாஷணை முடிந்து இருவரும் தூங்கி விட்டனர்.

அடுத்த நாள் பூபதி வண்ணானுடன் புறப்பட்டபோது "இப்பொழுது நாம் எந்த இடத்துக்கு இந்தச் சலவைகளைக் கொண்டு போக வேண்டும்?" என்று கேட்டான் பூபதி.

அதற்கு வண்ணான் "இந்தத் துணி எல்லாம் ஜாலபுரி மந்திரி வீட்டுக்குப் போகிறதப்பா. அங்கு வாரம் தவறாமல் சலவைத் துணி செலுத்தியாக வேண்டும். பெரிய இடத்து வேலையல்லவா?" என்றான்.

பூபதிக்கு நாம் மந்திரி ஜம்புலிங்கத்தின் வீட்டிற்குச் செல்லப் போகிறோம் என்று



அம்மா (பக்கத்து வீட்டில் பேசிக் கொண்டிருந்து விட்டு உள்ளே வந்து):— ஏண்டா, கண்ணா! கையில் காயம் பட்டுக் கொண்டாயா? போனால் போகிறது! அழாமல் இருக்கிறாயே, சமர்த்து!

கண்ணன்:— நீ இங்கே இல்லாத சமயத்தில் தான் அழுது என்ன அம்மா பிரயோஜனம்?

நினைத்ததும் உத்ஸாகம் உண்டாகி விட்டது. சந்தோஷத்துடன் புறப்பட்டான்.

வண்ணானுடன் வெளுத்த துணிகளை எடுத்துக் கொண்டு சென்ற பூபதி மந்திரியின் வீட்டை யடைந்து வண்ணான் காட்டிய பெஞ்சியின் மீது மூட்டையை இறக்கி விட்டுத் தூர நின்று கொண்டிருந்தான்.

மந்திரி வீட்டு வேலைக்காரன் அழுக்குத் துணிகளைக் கொண்டு வந்து போட்டான். பூபதி அவற்றை ஒவ்வொன்றாக எண்ணினான். அப்பொழுது மந்திரியின் சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதம் விழுந்தது. அதுவே ஒரு வஸ்துவாகவோ, பணமாகவோ இருந்திருந்தால் பூபதி அதை மந்திரியிடம் கட்டாயம் கொடுத்திருப்பான். அவன் கையில் அகப்பட்டது கேவலம் ஒரு காகிதமாக இருக்கவே அதை வெளியில் எறிந்து விடலாம் என்று நினைத்து, அதை மடியில் வைத்துக் கொண்டான்.

வண்ணான் வீட்டிற்குத் திரும்பி வந்ததும் வழக்கம்போல் எட்டணா வாங்கிக் கொண்டான். அப்பொழுது மந்திரியின் சட்டையினின்றும் ஒரு காகிதத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டது நினைவுக்கு வந்தது. அதை எடுத்துப் பார்த்தான்.

அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது.

அரிய நண்பருக்கு,

மந்திரிப் பெரும! தாங்கள் குறித்தபடி வரும் புதனன்று மாலை ஏழு மணிக்கு மேலப்பாலத்தின் புளியமரத்தடியில் வந்தால் நாம் விஷயங்களைப் பேசி முடிக்கலாம். நான் தவறாமல் வந்து சேருகிறேன்.

இப்படிக்கு

வீரபத்திரன்

இதைப் படித்ததும் 'இதென்ன அதிசயம்! அவ்வளவு பெரிய வீடு இருக்கும்பொழுது மேலப்பாலத்துப் புளிய மரத்தின் கீழ்ப் போய்ப் பேசவானேன்? இதில் ஏதோ விசேஷம் இருக்கிறது' என்று தீர்மானித்து அந்த விசேஷத்தை எப்படியாவது அறிய வேண்டும் என்று அவனுக்கு ஆவல் உண்டாயிற்று. உடனே பூபதி அந்தக் கடிதத்தை ஜாக்கிரதையாக வேஷ்டியில் முடிந்து கொண்டான். (தொடரும்)

# யுத்த தந்திரம்!

## விஜயம்

கிட்டுவும் மற்றப் பையன்களும் கடற்கரை மணலில் விளையாடிக் கொண்டிருந்தார்கள், என்னென்னவோ விளையாட்டெல்லாம் விளையாடினார்கள். கடைசியில் கட்சி பிரிந்து யுத்த விளையாட்டு விளையாட ஆரம்பித்தார்கள்.

கிட்டுவின் தாத்தா பையன்களின் விளையாட்டை ரஸித்துக் கொண்டிருந்தார். யுத்த விளையாட்டு ஆரம்பமானதும் தாத்தாவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஏனென்றால் அவர் • நிஜமாகவே மகா யுத்தத்தில் சேர்ந்து சண்டை போட்ட மாஜி சிப்பாய். துப்பாக்கியும் கையுமாக அவர் போர்க்களத்தில் இருந்த மாதிரி வீட்டில் படம் கூட மாட்டியிருக்கிறார். தாத்தா உற்சாகத்துடன், கிட்டுவை அழைத்தார்.



"கிட்டு, நீ உன் கட்சிப் பையன்கள் உதவியைக் கொண்டு எதிர்க்கட்சிப் பையன்களைத் தோற்கடித்து விடு. பிறகு அவர்கள் கோட்டையை நீ பிடித்துக் கொள். காயம் உண்டாகும்படி யாரும் அடிக்கக்கூடாது. ஜாக்கிரதை! இது விளையாட்டு யுத்தம் என்பதை எல்லோரும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். நீ ஜயித்து விட்டால் நான் உனக்கு ஒரு ரூபாய் தருகிறேன்!" என்று தாத்தா உற்சாகத்தோடு சொன்னார்.

கிட்டுவுக்கும் இதைக் கேட்க உற்சாகமாயிருந்தது. "சரி, தாத்தா!" என்றான் சந்தோஷத்துடன்.

தாத்தா, "உம்! யுத்தம் ஆரம்பமாகலாம்!" என்று ராணுவக் குரலில் கண்டிப்பாக உத்தரவு போட்டார்.

யுத்தம் ஆரம்பமாயிற்று. சண்டை போட்டுக் கொண்டே பையன்கள் கொஞ்சதூரம் போய் விட்டார்கள்.

ஐந்து நிமிஷம் கழித்து, கிட்டு வீர நடை போட்டுக்கொண்டு தாத்தாவிடம் வந்தான். "தாத்தா, சண்டையில் எனக்குத்தான் வெற்றி!" என்று சந்தோஷத்தோடு சொன்னான்.

"இந்தா, ஒரு ரூபாய்!" என்று சந்தோஷத்தோடு ஒரு ரூபாயைக் கிட்டுவினிடம் கொடுத்து விட்டு, தாத்தா, "கிட்டு, அவர்களை எப்படி அவ்வளவு சீக்கிரத்தில் தோற்கடித்தாய்?" என்று கேட்டார்.

"யுத்த தந்திரங்களில் ஒன்றினால் அவர்களைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தேன், தாத்தா!" என்றான் கிட்டு.

"அது என்ன தந்திரம், கிட்டு?" என்று கேட்டார் தாத்தா.

உடனே கிட்டு உற்சாகத்தோடு, "நான் எதிர்க் கட்சிப் பையனுக்குக் கால் ரூபாய் தருவதாகச் சொன்னேன். உடனே எதிரிகள் தாங்களாகவே சரணாகதியடைந்து விட்டார்கள், தாத்தா!" என்றான்.

# அழகி வஸந்தா



புஷ்யன்

என்னுடைய அத்தையிடமிருந்து என் தகப்பனாருக்குக் கடிதம் வந்திருந்தது.

அண்ணாவுக்கு,

இங்கு யாவரும் க்ஷேமம். வஸந்தா எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்து விட்டாள். வருகிற ஆவணி மாதத்திலேயே அவளுடைய கல்யாணத்தை முடித்து விடலாம் என்றிருக்கிறேன். உனக்கு ஒன்றும் ஆட்சேபணை யில்லையே? உடனே பதில் எழுதவும்.

இப்படிக்கு,
சௌந்தரம்

இந்தக் கடிதத்தைக் கண்டதும் எனக்கு மட்டில்லா மகிழ்ச்சி உண்டாகியது. என் தகப்பனார் இதற்கு உடனே பதில் எழுதிவிட்டார். என் தாயாரைக் கலந்தாலோசித்துக் கடைசியாக என்னையும் ஒரு வார்த்தை கேட்டு விட்டுத்தான் எழுதினார். ஆம், நான் என் சம்மதத்தைத் தெரிவித்து விட்டேன்.

வஸந்தாவை நான் மணந்து கொள்வது என்பது வெகு நாட்களுக்கு முன்பே நிச்சயமாகி விட்டது. நாங்கள் இருவரும் ஒன்றாகச் சிறு குழந்தை முதல் விளையாடிப் பழகி வந்ததைக் கண்டு என் தகப்பனாரும், அத்தையும் நாங்கள் இருவரும் சரியான ஜோடி தான் என்று நிர்மானித்து விட்டார்கள். நாங்கள் இருவரும் எந்த விளையாட்டு விளையாடினாலும்—ஆமாம், அப்பா, அம்மா விளையாட்டு விளையாடினால் கூடத்தான்—சண்டை போட்டுக் கொள்ள மாட்டோம். ஒரு சமயம் கூட நான் அவளைக் கோபித்தது கிடையாது; அவளும் என்னிடம் 'டூ' விட்டதே இல்லை.

நன்றாக ஞாபகம் இருக்கிறது இன்னமும். என் தகப்பனார் வஸந்தாவைத் தூக்கிப்பிடித்துக் கொண்டு தட்டாமாலை சுற்றினார். அலை மாதிரி அவளுடைய உடல் நெளியும்படி சுற்றினார். அப்போது அவளுக்கு வயது ஐந்து. எனக்குப் பத்து வயது. அதைப் பார்த்ததும் அவளை நானும் தூக்கிச் சுற்ற வேண்டும் என்று ஆசையுண்டாகவே, அப்பா அந்தப் பக்கம் போனதும் அவளுடைய கைகளைப் பிடித்துச் சுற்றுவதற்குப் பிரயத்தனம் செய்தேன். ஒரே சுற்றுத்தான். இரண்டாம் சுற்றுச் சுற்றும் போது 'பட்' டென்று அவள் அப்படியே குப்புற விழுந்து விட்டாள். கீழே சிமிட்டித்தரை; நானும் பின் பக்கமாக விழுந்து விட்டேன். ஆனால் எனக்கு அவ்வளவு அடி இல்லை. அவளுக்குப் பலத்த அடி. பல்லிலிருந்து ரத்தம் கசிந்தது. ஆனால் அவள் அழாமல் வாயைத் தன் பாவாடையால் துடைத்துக் கொண்டே, "ராஜாமணி, அடிபட்டுட்டுதா?" என்று கொஞ்சிய வாறே கேட்டது இன்னமும் என் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவளுடைய குறுகுறுத்த விழிகளும், கொச்சை கொச்சையாகப் பேசும் போது அவள் கன்னங்களில் குழி விழுவதும் இன்னமும் என் மனசை விட்டு அகலவே இல்லை.

இவ்வளவு நெருங்கிப் பழகிய வஸந்தாவை மணந்து கொள்ள மாட்டேன் என்று மறுக்க எனக்குப் பைத்தியமா பிடித்திருக்கிறது? மூன்று வருஷங்களுக்கு முன்பு தான் அவள் சென்னைக்குப் போய் விட்டாள். அவளுடைய தகப்பனாரை சென்னை ஜி. பி. ஓ. வுக்கு மாற்றி விட்டார்கள். அவளுக்கு அப்போது வயது பதின்மூன்று. ஆனால் அந்தப் பதின்மூன்று வயதில் எடுத்த போட்டோ எங்கள் வீட்டில் தொங்கிக் கொண்டிருக்கிறது. அடிக்கடி அதைப் பார்த்து நான் சந்தோஷத்தால் பூரித்துப் போவேன். இப்போது அவள் என்னைவிடப் பன்மடங்கு சௌந்தர்யத்துடன், யௌவனத்தின் சோபையுடன், உயரமாக, வளர்த்தியாக இருப்பாள். முன்பெல்லாம் என்னை, "டேய் ராஜாமணி" என்றுதான் கூப்பிடுவாள். ஆனால் இப்போது அப்படிக் கூப்பிடுவாளா? முன்போல் சகஜமாக என்னுடன் பழகுவாளா? இயற்கையான நாணம் கலந்து நெளியும் அவளுடைய உடல் முன்னை விட எவ்வளவு வனப்புடன் விளங்கும் என்று நினைத்து மனதிற்குள் மகிழ்ந்து வந்தேன்.

என் தகப்பனார் சம்மதம் தெரிவித்துக் கடிதம் எழுதிய நான்கு நாட்களுக்கெல்லாம் நிச்சயதார்த்தத்துக்கு நான் குறித்து விட்டு எங்கள் யாவரையும் வரும்படி எழுதியிருந்தாள் என் அத்தை. அதைக்



மாஜிஸ்டிரேட்:—ஒரு பித்தளைத் தட்டைக் கொண்டு உன் நண்பன் உன்னைத் தலையில் பலமாக அடித்ததாகச் சொல்லுகிறாய், தலையில் ஒரு அடையாளத்தையும் காணோமே!

அவன்:—அந்த அடையாளம் தட்டைப் பார்த்தால் தானே தெரியும்?



"என்னங்க அருணாசலப் பண்டாரம்! உங்க ஓட்டை யாருக்குப் போடப் போறீங்க?"
"அதைப் போட்டு விட்டு தானே மத்தா நான் பிச்சை எதிலேங்க வாங்கறது?"
"அடேடே! அந்தத் திருவோடு இல்லீங்க! வாக்குரிமை வோட்டு!"

---

கேட்டு என் மனம் குதூகலத்தில் அமிழ்ந்தது. மூன்று வருடங்களுக்கு முன் கடைசியாகப் பார்த்த 'சிறுமி' வஸந்தாவை, இப்போது வஸந்தத்தின் தென்றலைப் போல் யௌவனக் காந்தியுடன் விளங்கும் புதுக் 'குமரி' வஸந்தாவைக் காணப் போகிறோம் என்ற ஆனந்தக் கனவு கண்டு கொண்டிருந்தேன்.

மத்தியானம் சாப்பிடும் போதுதான் வஸந்தாவைப் பார்க்க முடிந்தது. அவள் நெய்யைக் கொண்டு வந்து ஊற்றினாள். இரண்டு கரண்டி அதிகமாகவே ஊற்றி விட்டாள். "உம்...போதும், போதும்" என்று கூறிக் கொண்டே அவளுடைய முகத்தை நிமிர்ந்து பார்த்தேன். பார்த்த அளவில் என் மனத்தில் சட்டென்று ஏதோ ஒரு விதமான 'சப்' பென்ற எண்ணம் விழுந்து விட்டது. ஒரு பெரும் ஏமாற்றம் ஏற்பட்டு விட்டது. ஆம்; அவளுடைய முக மண்டலம் நான் எவ்வளவு தூரம் என் கற்பனையில் நினைத்து மகிழ்ந்தேனோ அவ்வளவு அழகாய் இல்லை; வசீகரமாய் இல்லை. இல்லை; அப்படிச் சொல்லுவதை விட அவளது பழைய அழகான முகத்தில் ஏதோ ஒன்று புதிதாகத் தோன்றி அவளுடைய அழகையே கெடுத்துக் கொண்டிருந்தது என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் அப்படி அவள் அழகைக் கெடுத்தது எது என்று மட்டும் எனக்குத் தெரியவில்லை.

நான் அவளைப் பார்த்ததை உணர்ந்ததும் வஸந்தா வெட்கத்தால் தலைகுனிந்து உள்ளே ஓடிவிட்டாள். அவள் ஓடியதைப் பார்த்தேன். மான் துள்ளி ஓடுவதுபோல் இருந்தது. ஆனாலும் அவளுடைய முகத்தைப் பற்றி நினைக்கும்போது......

சாப்பாடு எனக்குச் சரியாகத் தொண்டையில் இறங்கவில்லை. "என்ன, மாப்பிள்ளையாகி விட்டதால் சங்கோஜமா?" என்று என் அத்தை கேலி செய்தாள்.

"ஊம்...அப்படியில்லை, இன்னும் கொஞ்ச நாட்களுக்கு ஒன்றும் பசிக்காது" என்று அவளுடைய கணவர் கூறினார் சிரித்தவாறே.

ஆனால் எனக்கு அவையெல்லாம் ருசிக்கவில்லை. என் மனம் வஸந்தாவின் 'அழ'கைப் பற்றியே நினைத்துக் கொண்டிருந்தது. 'அவள் எவ்வளவு அழகாக இருந்திருக்க வேண்டும். ஏன் முகத்தில் எதிர்பார்த்த வசீகரம் காணப்படவில்லை?' என்று என் மனத்தைக் குழப்பிக் கொண்டேன்.

மூன்று வருஷத்திற்கு முன் வரையில் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எத்தனை அழகாக வசீகரத்துடன் ,கண்டவர்களை மயக்கும்படி காட்சியளித்து வந்தாள். ஏன் இப்போது இப்படி......?

நான் என் கற்பனையில் அதிகமாக அவளுடைய அழகைத் தீட்டி எதிர்பார்த்து விட்டேன் என்பதை என் மனம் ஒப்புக் கொள்ளவில்லை. நான் நினைத்தபடிதான் அவள் அழகாய் இருந்திருக்க வேண்டும் என்று என் மனம் கண்டித்துக் கூறிற்று. அப்படியில்லாமல் போனதன் காரணம் என்ன என்பதை அறிய என் மனம் பாடு பட்டது. என்ன முயன்றும் முடியவில்லை.

பின்? இப்போது என்ன செய்வது? நிச்சயதார்த்தத்துக்கு வந்து விட்டோம். நாளைக் காலையில் நிச்சயதார்த்தம் ஆகப் போகிறது.

நான் வஸந்தாவை மணந்து கொள்வதா? என் மனம் ஏனோ சம்மதிக்கவில்லை. அவளுடைய முகத்தைப் பற்றி நினைத்த போது 'அந்த' ஒரு கணமே என்றால் அவள் முகத்தைப் பார்க்கச் சகிக்கவில்லையே; என் ஆயுள் முழுவதும் பார்த்துக் கொண்டிருக்க வேண்டுமென்றால்? அதனுடன் கொஞ்ச வேண்டுமென்றால்......?

'அட, என்ன பைத்தியக்காரத்தனம் செய்து விட்டேன். முன்னமே தெரிந்த பெண்தானே என்று சம்மதிப்பதற்குமுன் ஒரு தடவைகூடப் பார்க்கவேண்டிய அவசியமில்லை என்று எண்ணி ஏமாந்து விட்டேனே!' என்று வருத்தப் பட்டேன்.

கடைசியில் வஸந்தாவை மணப்பதில்லை என்று தீர்மானித்து விட்டேன். என் தகப்பனாரைக் கூப்பிட்டு அவரிடம் கூறி விட்டேன். அவர் திகைத்தார். "என்னடா, பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று ரகசியமாக இரைந்தார்.

"இல்லையப்பா, தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள். அவளை மூன்று வருஷங்களுக்கு முன்பு பார்த்த நினைப்பில் தெரியாமல் என் சம்மதம் கொடுத்து விட்-

டேன். இப்போது நேரில் பார்த்ததும் அவனை எனக்குப் பிடிக்கவில்லை! அவ்வளவு தான்!" என்று கூறினேன்.

"என்ன, அவனை உனக்குப் பிடிக்கவில்லையா! சின்ன வயதிலிருந்து ஒன்றாக வளர்ந்து விட்டு, இப்போ ஒரு விநாடி பார்த்ததும் எப்படியடா பிடிக்காமல் போய் விட்டது?" என்று விடாப் பிடியாய்க் கேட்டார்.

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. ஆனாலும் என் மனம் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள இப்போது சம்மதிக்கவில்லை. இதற்குமேல் என்னால் கூற முடியாது. அவ்வளவுதான்."

"கர்மம். கர்மம்... இதை னரிலேயே சொல்லித் தொலைப்பதற் கென்ன? அப்போது 'ஒரு தடவை பார்க்க வேண்டும்' என்று சொல்வதற்கென்ன... அப்போது எங்கே போயிற்று புத்தி? நான் இப்போது அவர்களுக்கு என்னவென்று பதில் சொல்வது?" என்று சங்கடப் பட்டுக் கொண்டே போனார்.

இரண்டு மூன்று விமிஷங்களுக் கெல்லாம் பின்னால் யாரோ வந்து நிற்பதை உணர்ந்தேன். திரும்பிப் பார்த்தேன், வஸந்தா!

"என்ன வஸந்தா? எங்கே வந்தாய்?" என்று பதட்டத்துடன் கேட்டேன். அவள் கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது.

மௌனமாக இருந்தாள். தலையைக்குனிந்து கொண்டு விசும்பும் சத்தம் கேட்டது.

"என்ன வஸந்தா, சொல். ஏன் அழுகிறாய்?" என்றேன் மறுபடி.

"ஏன் என்னை உதறித் தள்ளுகிறீர்கள்?" என்று கேட்டாள் வஸந்தா விம்மலுக் கிடையில்.

அவளுக்கு எப்படித் தெரிந்தது?

"நீ என்ன சொல்கிறாய் வஸந்தா?"

"நீங்கள் மாமாவுடன் பேசின தெல்லாம் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன்... என்னைப் பிடிக்கவில்லையா?" என்று கேட்டாள்.

நான் என்னவென்று பதில் சொல்வது? ஒரு பெண் நேரே இப்படி ஒரு கேள்வி கேட்கும்போது எப்படிப் பதில் கூற முடியும்? அதுவும் குழந்தை முதல் பதின்மூன்று வருஷங்கள் நேசத்துடன் பழகிய வஸந்தாவை நிராகரிப்பது என்றால், அதற்கான காரணத்தை அவளிடம் கூறுவதென்றால் முடியுமா?

"வஸந்தா, நான் என்ன சொல்வதென்றே தெரியாமல் இருக்கிறேன். என் மனது சரியாக இல்லை... நீ தயவு செய்து போயேன்..." என்றேன்.

வஸந்தா மெல்ல நகர்ந்தாள். வெளியே போய் விட்டாள் என்று நினைத்தேன். ஆனால் மறுபடியும் என்னருகில் வந்தாள்.

"இதைப் பாருங்கள்... நாம் இருவரும் ஒன்றாய் எடுத்துக் கொண்ட போட்டோக்கள். இப்படி ஒன்றாக எப்போதும் நாம் வாழ்க்கையில் இருப்போம் என்று எத்தனை ஆசைக் கோட்டைகள் கட்டினேன். அவ்வளவும்



"சே! திருட்டுப் பயல்! எல்லாம் நகைகளாகவே வைத்திருக்கிருன். கொஞ்சங்கூட ரொக்கம் இல்லை."

---

தகர்ந்து விட்டதே! உங்களை விட்டு நான் வேறு ஒருவரை எப்படி மனதால் நினைக்க முடியும்?" என்று கேட்டாள் வேதனையுடன்.

நான் போட்டோக்களைப் பார்த்தேன். கைக் காமிராவினுல் அவளுடைய ஐந்து வயது முதல் பன்னிரண்டு வயது வரை அவளுடன் நான் சேர்ந்து எடுத்துக்கொண்ட ஏழெட்டுப் போட்டோக்கள் ஒரு அட்டையில் ஒட்டி "பிரேம்" போட்டிருந்தது. ஒவ்வொன்றையும் கூர்ந்து கவனித்தேன். கடந்த கால இன்ப நினைவுகள் எல்லாம் கவனத்துக்கு வந்தன. அந்தப் போட்டோவை எனக்குக் காட்டிக் கொண்டிருந்த வளைக்கரங்களைக் கவனித்தேன். தளிர் போன்ற கரங்கள்! அதில் எத்தனை யௌவனம் ததும்பியது?

பாதத்திலிருந்து மெதுவாக அவளுடைய உருவத்தைப் பார்த்துக்கொண்டு தலையை நிமிர்த்தினேன். ஆகா...எல்லா அங்கங்களும் பூரணமாகப் பொலியும்போது முகம் மட்டும் ஏன் இப்படி கோரமாகத் தென்படுகிறது? காரணம் என்ன?

கண்களில் ஒளி, குவிந்த உதடுகள், உருண்ட கன்னங்கள் எல்லாம் கவர்ச்சிகரமாக இருந்தன.

ஆனுல் ஏதோ ஒன்று அவளுடைய முகத்தைப் பாழ்படுத்தியது......

ஒருமுறை அவள் பன்னிரண்டு வயதில் காட்சியளிக்கும் படத்தைப் பார்த்தேன். பட்டுப் பாவாடையும், கௌனும் அணிந்து கொண்டிருந்தாள். குறு குறுப்பான கண்கள் என்னை ஊடுருவிப் பார்ப்பதுபோல் இருந்தன. எத்தனை அழகான முகம், சந்திர மண்டலத்தைவிட எவ்வளவு அழகான முகம்!

"வஸந்தா, இதோ இந்தப் படத்தில் உன் முகம் பொலிவதை...இவ்வளவு அழகாக இருந்த நீயா...இப்படி...நம்ப முடியவில்லையே..... மாறிவிட்டாய்?"

நிமிர்ந்து வஸந்தாவின் முகத்தைக் கூர்ந்து கவனித்தேன். அவளுடைய புருவம், நெற்றி, அதன் மத்தியில் சுடர்விட்டு ஒளிரும் திலகம்...அதற்கு மேல்...கூர்ந்து நோக்கினேன். மறுபடி போட்டோக்களைப் பார்த்தேன். உண்மை தெரிந்து விட்டது! அவளுடைய அழகைப் பாழ்படுத்தியது எது என்று கண்டு பிடித்து விட்டேன்!

"வஸந்தா, எத்தனை நாட்களாய் நீ கோணல் வகிடு எடுத்துக் கொள்ள ஆரம்பித்திருக்கிருய்?" என்று கேட்டேன். அதைக் கேட்டதும் எனக்குப் பெரிய உண்மையைக் கண்டு பிடித்துவிட்ட பெருமை உண்டாகி விட்டது.

வஸந்தா ஒரு கேள்விக்குறியுடன் நோக்கினுள். உடனே "இதற்காகவா ...?" என்று கூவிவிட்டாள். "இதோ வருகிறேன்" என்று துள்ளி ஓடி மறைந்தாள்.

நான் இன்பத் தியானத்தில் மூழ்கியவாறே உட்கார்ந்திருந்தேன்.

*

இரண்டு நிமிடங்கள் கழித்து உள்ளே வளை குலுங்கும் சத்தத்துடன் வந்த வஸந்தாவின் முகத்தை விட்டு என் பார்வையைத் திருப்பவே முடியவில்லை. அவள் அழகை நான் எப்படி முன்பு கற்பனை செய்துவைத்திருந்தேனே அதைவிடப் பன்மடங்கு சௌந்தர்யத்துடன் அவள் விளங்கினுள்.

"வஸந்தா, ஒரு கோணல் வகிடு உன் அழகை எவ்வளவு பாழ்படுத்தி விட்டது. எப்படி இதைப் பிடித்துக் கொண்டாய்?" என்று கேட்டேன்.

அவள் தலையைக் கவிழ்த்தவாறே வெட்கத்துடன், "என் பள்ளிக்கூடத் தோழி ஒருத்தியைப் பார்த்து அப்படி வாரிக்கொண்டேன். அப்போதே அம்மா கோபித்துக் கொண்டாள். ஆனுல் இப்போதுதான் அது எவ்வளவு தூரம் பிரமாதத்தை விளைத்து விடும் என்பது தெரிந்தது" என்ருள்.

"என்னடாப்பா, ராஜாமணி! இப்படித் திடீர்னு குண்டைத் தூக்கிப் போடுகிருயே!" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தாள் அத்தை. வஸந்தா துள்ளி ஓடி மறைந்தாள்.

நான் சிரித்தவாறே, "இன்னொரு பெரிய வெடிகுண்டைப் போடப் போகிறேன், அத்தை! இப்போது நான் வஸந்தாவைத் தான் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன்!" என்றேன்.

அத்தை ஒன்றும் புரியாமல் விழித்தாள்.




## சூயஸ் கால்வாய்

செங்கடலைக் கடந்து எகிப்துக்குச் சென்றோம் அல்லவா? சென்ற சில வாரங்களாக எகிப்து நாட்டைச் சுற்றிப் பார்த்தாகி விட்டது. இப்போது எகிப்திலிருந்து பாலஸ்தீனம், டிரான்ஸ் ஜார்டன் முதலிய நாடுகளுக்குச் செல்வதாயின், சூயஸ் கால்வாயைத் தாண்டியாக வேண்டும்.

உலகப் பிரசித்திபெற்ற இந்தக் கால்வாயைக் கடந்து செல்லும்போது, இதைப் பற்றிய அற்புதமான விவரங்களைத் தெரிந்து கொள்ளவேண்டியது அவசியம்.

சூயஸ் கால்வாய், மத்தியதரைக் கடலையும் செங்கடலையும் இணைக்கும் ஒரு சங்கிலிபோல் அமைந்திருக்கிறது. எனினும் மேற்படி கடல்களைப்போல் சூயஸ் கால்வாய் இயற்கையினால் சிருஷ்டிக்கப் பட்டதல்ல; அது மனிதனின் அற்புதமான சிருஷ்டிகளில், சாதனைகளில் ஒன்று!

கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே சூயஸ் கால்வாய் அக்காலத்திலிருந்த நிபுணர்களின் திட்டத்துக்கு இணங்க வெட்டப்பட்டதாகத் தெரிகிறது. ஆனால் பிறகு அந்தக் கால்வாயை மணல் சமுத்திரமான பாலைவனம் கபளீகரம் செய்து விட்டது. இவ்வாறு அக்கால்வாய் இரண்டு மூன்று தடவை வெட்டப்பட்டும், மீண்டும் மீண்டும் அதைப் பாலைவன மணல் ஆக்கிரமித்துக் கொண்டதால், பல நூற்றாண்டுகள் வரையில் அம்முயற்சி அடியோடு கைவிடப்பட்டது.

கடைசியாக, கிறிஸ்துவ சகாப்தம் பதினாறாவது நூற்றாண்டில்தான் அந்தக் கால்வாயை மறுபடியும் வெட்டுவதற்கான உருவான திட்டத்தை வகுத்தார்கள்.

அந்தக் காலத்தில் எகிப்தின் முக்கிய தலைவராக விளங்கிய முகமது அலி, சூயஸ் கால்வாய் வெட்டும் திட்டத்தைப் பலமாக எதிர்த்தார். அவ்விதம் அவர் எதிர்த்ததற்கு இரண்டு முக்கிய காரணங்கள் இருந்தன.

1. சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டால் அது ஐரோப்பா-ஆசியாவின் கப்பல் போக்குவரத்துக்கு உயிர்நாடியாக விளங்கும். அதன் விளைவாக சூயஸ் பிரதேசம் வல்லரசுகளின் கண்ணோட்டத்துக்கு இலக்காவதுடன், நிரந்தரமான தகராறுகளுக்கும் போட்டாபோட்டிக்கும் கேந்திர ஸ்தானமாகிவிடும்.

2. சூயஸ் கால்வாய் மார்க்கமாகப் போக்குவரத்து நடைபெறுமாயின், தரை மார்க்கமாக நடைபெறும் போக்குவரத்து முற்றிலும் நின்று எகிப்துக்குக் கிடைத்துவரும் அபரிமிதமான வருமானத்துக்கு ஆபத்து ஏற்படும்.

முகமது அலியின் பீதி ஆதாரமற்றது அல்ல என்பதை இன்றையச் சம்பவங்கள் நிரூபித்திருக்கின்றன. சூயஸ் கால்வாய் இராவிடில் எகிப்து பல ஆண்டுகளுக்கு முன்பே பூரண சுதந்திரத்தை அடைந்திருக்கலாம்.

ஆனால் அப்போது முகமது அலியின் எதிர்ப்பை யாரும் லட்சியம் செய்யவில்லை. கடைசியில் பிரஞ்சு ராஜதந்திரியும் இஞ்ஜினீருமான பர்டினாண்ட் டி லெஸ்ஸப்ஸ் சூயஸ் கால்வாய் வெட்டும் திட்டத்தைத் தயாரித்ததுடன், அதை அமுலுக்குக் கொண்டு வரவும் உறுதி கொண்டார்.

அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் விஷயமாக அவர் 1854-ம் ஆண்டில் மிகவும் கஷ்டப்பட்டு எகிப்து வைஸ்ராயான சேட் பாஷாவிடமிருந்து அனுமதி பெற்றார். அத்துடன் அவரது முயற்சிக்கு முட்டுக்கட்டையாக இருந்த பிரச்னைகள் தீர்ந்துவிடவில்லை. அந்தப் பிரச்னைகளையெல்லாம் தீர்த்து, தமது திட்டத்தை நிறைவேற்றுவதற்காக அவர் ஐந்து வருஷ காலம் மிகவும் பாடுபட்டார்.

மேற்படி திட்டத்துக்காக பர்டினாண்ட் ஐரோப்பாவுக்குச் சென்று நிதி சேகரிக்க முற்பட்டபோது, பிரிட்டன், ருஷ்யா, ஆஸ்திரியா, அமெரிக்கா முதலிய நாடுகள் அவரது முயற்சியை ஆதரிக்கவில்லை; அவரது நிதிக்குத் தொகை கொடுக்க அந்த நாடுகள் மறுத்து விட்டன.

எனினும் கடைசியில் பிரான்ஸ் பாதிக்கு மேற்பட்ட பங்குகளை வாங்கியது; எகிப்து துருக்கி முதலிய நாடுகளும் பங்குகள் வாங்கின. இவ்விதம் நாலுகோடி டாலர் மூலதனம் போட்டு, கால்வாய் வெட்டும் கம்பெனி ஆரம்பிக்கப் பட்டது.

சூயஸ் கால்வாயை வெட்டுவதற்கு எகிப்து இருபதினாயிரம் தொழிலாளர்களை அனுப்ப




வேண்டும் என்பதும் மேற்படி திட்டத்தில் ஒரு நிபந்தனையாக இருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில், துரதிஷ்டவசமாக எகிப்து வைஸ்ராய் மாண்டதால், கால்வாய் வெட்டும் திட்டம் மீண்டும் அதோகதியாகும்படியான நிலைமை ஏற்பட்டது.

செட் பாஷாவுக்குப் பின் எகிப்து வைஸ்ராயாக வந்த இஸ்மெயில் பாஷா ஏற்கெனவே வகுக்கப்பட்ட திட்டம் எகிப்தின் நலன்களுக்கு முரணாக இருப்பதாய்க் கூறி, அதை ரத்துசெய்து விடவும் முற்பட்டார். "சூயஸ் கால்வாய் எகிப்து நாட்டின் சொத்தாக இருக்க வேண்டும்; எகிப்து சூயஸ் கால்வாய்க் கம்பெனியின் சொத்தாக இருப்பதை நான் சகிக்க முடியாது" என்று சொல்லி விட்டார் இஸ்மெயில் பாஷா.

பின்னர் அவ்விஷயமாக ஒரு சமரசம் ஏற்பட்டது. கடைசியில் பதினாயிரக்கணக்கான தொழிலாளர்கள் பத்து வருஷ காலம் கஷ்டப்பட்டு உழைத்து சூயஸ் கால்வாயை வெட்டினார்கள். இதை வெட்டி முடிப்பதற்குச் சுமார் பதின்மூன்று கோடி டாலருக்கு மேல் செலவானதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

1869 நவம்பர் மாதம் பர்டினான்டின் திட்டம் முற்றிலும் நிறைவேறி சூயஸ் கால்வாய் கப்பல் போக்குவரத்துக்காகத் திறக்கப்பட்டது.

* * *

சூயஸ் கால்வாயை வெட்டுவதற்குப் பிரிட்டன் எவ்வித உதவியும் புரிய மறுத்து விட்டதெனினும், அந்தக் கால்வாயினால் பிரிட்டனைக் காட்டிலும் அதிக பலனடைந்த நாடு வேறு எதுவுமில்லை.

சூயஸ் கால்வாய் வெட்டப்பட்டதால், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உள்ள தூரத்தில் ஆறுயிரம் மைல்கள் குறைந்தன. அந்தக் கால்வாய் ஏற்படுவதற்கு முன் லண்டனிலிருந்து கப்பல்கள் ஆப்பிரிகாவைச் சுற்றிக்கொண்டு பம்பாய்க்கு வந்து சேர நாற்பத்தைந்து நாட்கள் ஆயின. ஆனால் மேற்படி கால்வாய் வெட்டப்பட்டபின் லண்டனிலிருந்து பதினைந்தே நாட்களில் கப்பல்கள் பம்பாய்க்கு வந்து சேருவது சாத்தியமாயிற்று. இதன் பலனாக உலகத்தின் பொருளாதார சரித்திரத்திலேயே ஒரு புரட்சிகரமான மாறுதல் ஏற்பட்டது எனலாம்.

பிரதி வருஷமும் அந்தக் கால்வாய் வழியாக ஆறுயிரம் வர்த்தகக் கப்பல்களுக்கு மேல் போய் வருகின்றன. அவைகளின் மூலம் சூயஸ் கால்வாய்க் கம்பெனிக்கு வருஷா வருஷம் கோடிக்கணக்கில் வருமானம் கிடைத்து வருகிறது.

அந்தக் கால்வாய் ஏற்பட்ட பிறகுதான் ஐரோப்பிய—ஆசியா வியாபாரப் போக்குவரத்து பன்மடங்கு பெருகியது.

சூயஸ் கால்வாய் வெட்டும் திட்டத்தில் பிரிட்டன் எவ்வளவு பங்கும் எடுத்துக் கொள்ளவில்லை. அப்படியிருந்தும் சூயஸ் கால்வாய் நிர்வாகம் பிரிட்டிஷாரின் கைக்கு எப்படி வந்தது என்பதைப் பார்க்கலாம்.

1875-ம் வருஷத்திலே எகிப்து மன்னரின் ஊதாரித்தனத்தினால் எகிப்து மக்கள் வறுமைக் கொடுமைக்கு இலக்காக நேர்ந்தது. எனவே அப்போது அவர் சூயஸ் கால்வாய்க் கம்பெனியில் தமக்கு இருந்த பங்குகளை விற்கலானார்.

அச்சமயம் பிரிட்டிஷ் பிரதம மந்திரியாக இருந்த டிஸ்ரேலி குறைந்த விலை கொடுத்து மேற்படி பங்குகளை வாங்கிக் கொண்டார். பின்னர் பிரஞ்சுக்காரர்களும் தங்கள் பங்குகளைப் பிரிட்டிஷாரிடம் விற்று விட்டார்கள். இவ்வாறாக அதிர்ஷ்டம் பிரிட்டிஷாரைத் தேடி வந்து அடைந்தது!

அதிலிருந்து சூயஸ் கால்வாயைப் பாதுகாக்கும் பொறுப்பு தங்களைச் சார்ந்திருக்கிறது என்று சொல்லி, பிரிட்டிஷார் அங்கு தங்கள் துருப்புகளை வைத்திருக்கிறார்கள். அவ்விஷயமாகவே இப்போது பிரிட்டனுக்கும் எகிப்துக்கும் தகராறு ஏற்பட்டிருக்கிறது.

இவ்வளவு கீர்த்தி வாய்ந்த சூயஸ் கால்வாயின் நீளம் நூற்றுநூன்று மைல்கள்தான். அது சராசரி முப்பத்தினாலு அடி ஆழமும் இருநூறு அடி அகலமும் இருக்கிறது.

அந்தக் கால்வாயில் அடிக்கடி வந்து படியும் பாலைவன மணலை அப்புறப்படுத்துவதற்காக வருஷம் முழுதும் யந்திரக் கப்பல்கள் வேலை செய்து வருகின்றன.

# ஏகாந்தப் பாதையில்

**ஸோமாஸ்**

என்னைப் பற்றி நினைக்கும்போது என்னையும் அறியாமல் மனதில் ஏக்கம் உண்டாகிறது. எல்லோரும் என்னை ஏகாந்தப் பாதையில் விட்டு விட்டுச் சென்று விட்டார்களா! அப்பப்பா! தனிமை! அது என்ன பயங்கரம்!

நான் யாரையும் என் மனசறியப் பிரித்ததில்லையே! அப்படியிருக்க எனக்கு மட்டும் ஏன் இந்தத் துன்பம்! ஏன் இந்த வேதனை!

சின்னஞ் சிறு வயதில் என் தோழி பத்மாவை என்னுடனேயே இருப்பதாக நினைத்தேன். சில நாட்களுக்குப் பிறகு அது எவ்வளவு பெரிய தவறு என்பது தெரிய வந்தது.

எனக்கு வயது பத்து இருக்கும். பத்மா என்னை விட ஐந்து வயது பெரியவள். ஆனால் நானும் அவளும் சம வயதுள்ளவர்களைப் போல் சேர்ந்து விளையாடுவதென்றால் அலாதி உற்சாகம். "கிரிஜா, கிரிஜா!" என்று என்னைச் சதா கூப்பிட்ட வண்ணம் இருப்பாள். எந்த வேடிக்கையானாலும் எந்த விளையாட்டானாலும் என்னிடம் சொல்லிச் சிரிக்காமலிருக்க அவளால் முடியாது.

பத்மா, அவள் அப்பா அம்மாவுக்கு ஒரே பெண். செல்வந்தர்களாதலால் அவளை மிகவும் அருமை பெருமையாக வளர்த்து வந்தார்கள்.



வக்கீல் சுந்தரமய்யர் பிள்ளை மூர்த்தி சீமைக்குப் போய்த் தொழிற் கல்வி பயிலப் போவதாகப் பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தான். எப்படியாவது கல்யாணம் செய்து வைத்த பிறகே அவனைச் சீமைக்கு அனுப்ப வேண்டும் என்று அவன் தகப்பனார் பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தார். பத்மாவின் தகப்பனார், தம் பெண்ணுக்கு ஒரு சீமை மாப்பிள்ளையாகத்தான் பார்த்துக் கொடுப்பேன் என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தார். எல்லோருடைய பிடிவாதமும் சேர்ந்து, பத்மாவுக்கும் மூர்த்திக்கும் விவாகம் நடத்துவதில் வந்து முடிந்தது. கல்யாணம் ஆன மறு மாதமே பத்மாவை விட்டு விட்டு அவனும் சீமைக்குப் புறப்பட்டு விட்டான்.

கல்யாணம் ஆன பிறகு பத்மா என்னோடு பழகுகிற மாதிரியில் முன் போல் கலகலப்பில்லை. ஏதோ ஒரு மாயத் திரை எங்கள் இருவருக்கும் இடையில் விழுந்து விட்ட மாதிரி எனக்குத் தோன்றியது.

பத்மாவின் வீட்டுக்குப் போனால் சதா ஏதாவது எழுதிக் கொண்டிருப்பாள். நான் என் பள்ளிக்கூடத்துப் பாட சம்பந்தமான சந்தேகங்களை அவளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளப் போவேன். அவள் எஸ்.எஸ்.எல்.ஸி. பாஸ் செய்துவிட்டாள்; படிப்பிலும் கெட்டிக்காரி

என்னிடம் முன்பெல்லாம் ஒளிவு மறைவு சிறிதும் இன்றிப் பழகி வந்த பத்மா இப்பொழுது அப்படியில்லை. அவள், நான் வருவதைப் பார்த்தால் எழுதுவதை நிறுத்திவிட்டு, அதை கோட்டுப் புஸ்தகத்துக்குள் மறைத்துக் கொள்ளுவாள்.

அப்படி அவள் விழுந்து விழுந்து எழுதினது வேறு ஒன்றும் இல்லை. அவள் அகத்துக்காரர் கடிதத்துக்குப் பதில் எழுதியிருக்கிறாள். அது எனக்குத் தெரிந்து விட்டது. ஆனால் அவள் கடிதத்தை என்னிடம் காட்டுவதில்லை. நான் சின்னவளாம், அதையெல்லாம் பார்க்கக் கூடாதாம். ஐயோடி, வேண்டாமே! அவளே அந்தக் கடிதத்தை வைத்துக் கொள்ளட்டுமே!

தீபாவளியன்று மாலை நான் வழக்கம்போல் பத்மாவின் வீட்டுக்குப் போனேன். எங்களுக்கு வாங்கியிருந்த பாவாடை, சிற்றாடை இவைகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். திடீரென்று அப்பொழுது பத்மாவின் அண்ணா நாங்கள் இருந்த இடத்துக்கு வந்து, "பத்மா, மாப்பிள்ளைக்குப் பரீக்ஷை பாஸாகி விட்டது!" என்று சொல்லிக் கொண்டே அவளிடம் ஒரு தந்தியைக் கொடுத்தான்.

பத்மாவின் முகம் வெட்கத்தால் சிவந்தாலும், வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல் தந்தியைக் கையில் வாங்கிக் கொண்டு உள்ளே ஓடினாள். அவளுடன் அவளது அண்ணாவும் போனான். அவள் தகப்பனாரும் பின்னாலேயே சென்றார்.

நான் மட்டும் தனியாக அங்கே உட்கார்ந்து கொண்டிருந்தேன். பத்மா என்னைக் கவனியாமல் போய்விடவே என்னவோ போல் இருந்தது. அவர்கள் வீட்டில் எல்லோரும் சேர்ந்து பேசிச் சிரித்துக் கொண்டிருந்தது என் காதில் மாத்திரம் விழுந்து கொண்டேயிருந்தது. என்னை ஏன் தங்களுடன் சேர்த்துக் கொள்ளவில்லை!

அப்போதுதான் நான் பத்மாவின் தங்கையாக இருக்கக் கூடாதா என்று நினைத்து ஏங்கினேன். அவளுடைய தங்கையாக இருந்தால் என்னை இப்படி ஒதுக்கியிருக்க

மாட்டார்கள் அல்லவா! நானும் ஏக்கத்துடன் தனியாக இருக்கமாட்டேன் அல்லவா!

எனக்கும்-பதினெட்டு வயது ஆயிற்று. ஆனால் என்ன! எனக்குக் கல்யாணம் ஆகாததைக் குறித்து அம்மா சதா வருத்தப்படுவாள். என் தகப்பனார் எங்கெல்லாமோ அலைந்து வரன் தேடிக் கொண்டு தான் இருந்தார். வரன்களும் வந்து கொண்டு தான் இருந்தார்கள். ஆனால் அவர்கள் போட்ட நிபந்தனைகள்தான் எங்களுடைய குடும்ப நிலைமைக்குச் சிறிதும் ஏற்றதாயில்லை.

நான் பத்மாவைப் போல் பணக்கார குடும்பத்தில் பிறக்கும் பாக்கியம் செய்யவில்லை. எனக்கு முன்னால் பிறந்திருந்த அக்காமார்களான பஞ்ச கன்னிகைகளையும் நல்ல இடங்களில் கன்னிகா தானம் செய்து கொடுத்து என் தகப்பனார் தளர்ந்து போயிருந்தார். பணக் கஷ்டம் அதிகம் ஆக ஆக அவருக்குத் தம்மிடம் இருந்த நம்பிக்கை குறைந்து கொண்டே வந்தது. அடிக்கடி அப்பா, "ஏழாவது பிள்ளையாய்ப் பிறந்திருக்கக் கூடாதா!" என்று ஏக்கத்தோடு சொல்லுவதுண்டு. அதற்கு நான் என்ன செய்ய முடியும்!

என்னை யாரோ ஒருவர் அன்றைக்கு வந்து பார்க்கப் போவதாகச் சொல்லிக் கொண்டார்கள். அப்பா அம்மாவுடன் ஏதோ ரகசியம் பேசிக் கொண்டிருந்ததை எவ்வளவோ முயன்றும் என்னால் தெரிந்து கொள்ள முடியவில்லை. என்னை அழைத்து, அம்மா, தலையை வாரிக் கொண்டு, நல்ல புடவையாகக் கட்டிக் கொள்ளச் சொல்லி, வெளியே எங்கும் போக வேண்டாம் என்று எச்சரிக்கை செய்தாள்.

அந்த எச்சரிக்கைப்படி நான் நடந்து கொண்டேன். அந்தமாதிரி எச்சரிக்கையோ, இந்த அலங்காரங்களோ எனக்கு ஒன்றும் புதியவை யல்லவே! ஆகையினால் ஒரு நொடியில் அனாயாசமாக ஆடையாபரண அலங்காரங்களை முடித்துக் கொண்டேன். வரப் போகிறவர் எப்படி யிருப்பார் என்று ஒருவாறு என் மனக் கண்ணால் பார்க்க முயன்றேன். வரப்போகிறவர் சிவப்பா, கறுப்பா என்று கூட அறிந்துகொள்ள முடியவில்லை சொல்லுவார் ஒருவரும் இல்லை. கல்யாணம் என்னவோ எனக்குத்தான். ஆனால் எனக்குத் தான் அவரைப் பற்றி ஒரு விவரமும் தெரியாது. என்னைத் தவிர, மற்றவர்களுக்கு அவரைப் பற்றி எல்லாம் தெரிந்திருந்தது. தெரியாமலா அப்படி மௌன மௌனமென்று சதா பேசினார்கள்!

இதுவரையில் என்னை வந்து பார்த்த எத்தனையோ வரன்களைப்போல இந்த வரனும் தட்டிப் போய் விடும் என்று என்னால் ஏனோ நினைக்க முடியவில்லை. 'இவர்தான் உன் கரம் பற்றப் போகிறவர்' என்று என் உள் மனம் சொல்லிக் கொண்டிருந்தது. இத்தனைக்கும் அவர் இன்னும் வரவில்லை.

என் தம்பி கிட்டுவின் வயது எனக்கு இருக்கலாகாதா என்று நினைத்து வருந்தினேன். அவனை ஒருவரும் சந்தேகிப்ப தில்லை. அவன் அப்பா எங்கே யிருந்தாலும் அங்கே யிருப்பான். அப்பாவும் அம்மாவும் பேசிக் கொள்வதையெல்லாம் அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்து அவன் கேட்டுக் கொண்டிருப்பான். ஆனால் அவனிடமிருந்து நாம் ஒன்றையும் தெரிந்து கொள்ளவே முடியாது. நான் மாத்திரம் அவனாக இருந்திருந்தால் எவ்வளவு தெளிவாக அவர்கள் பேசுவதை எல்லாம் கவனித்திருப்பேன்!



பெண் பார்க்கும் படலம் ஆடம்பரம் இல்லாமல் சுருக்கமாகவே முடிந்து விட்டது.

நான் ஒரு பிரபுவுக்கு இளையாளாக வாழ்க்கைப் பட்டேன். அவருக்கு வயது நாற்பதுக்குக் கொஞ்சம் குறைவு. வயது முதிர்ந்தவரா யிருந்தாலும் தேகக்கட்டு வாய்ந்தவரா யிருந்தார். அவரிடம் எனக்கு விருப்பம் உண்டாயிற்று என்று சொல்லி என் அந்தராத்மாவின் அபிப்பிராயத்தை மறைக்க எனக்கு விருப்பம் இல்லை. ஆகவே, அவரிடம் எனக்கு வெறுப்பு உண்டாக வில்லை என்று கூறுவதோடு என் அபிப்பிராயத்தை நிறுத்திக் கொள்ளுகிறேன். என்னைப் போன்ற ஏழைப் பெண்ணை வாழ்விக்க என்றே தோன்றி யிருக்கும் அந்த இரண்டாந்தாரக் காரரை நான் மனதுக்குள் வாழ்த்தினேன்.

என் கணவர், என்னைக் கல்யாணமானவுடன் ஊருக்கு அழைத்துப் போக வேண்டும் என்று கூறியதும் எனக்குக் கொஞ்சம் கவலையா யிருந்தது. ஆனால் நான் கவலைப்பட்டு என்ன பிரயோஜனம்! அவர் குடும்பத்தில் யார் யார் இருக்கிறார்கள் நான் யார் யாரிடமெல்லாம் பழக வேண்டி யிருக்கும் என்கிற விவரம் ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. அப்பா, அம்மா யாரும் அதைப் பற்றி யெல்லாம் எனக்குச் சொல்லவில்லை; நானும் கேட்கவில்லை.

அம்மா வாசற்படி வரையில் வந்து கண்களில் ததும்பும் நீருடன் என்னை ஊருக்கு அனுப்பி வைத்தாள். அப்பா என்னை ரயில்வே ஸ்டேஷன் வரையில் கொண்டு வந்து ரயிலில் ஏற்றி விட்டுப் போய் விட்டார்.

வண்டி நகர ஆரம்பித்ததும் என் கணவரும் என் அருகில் வந்து உட்கார்ந்து கொண்டார். பிறகு நிதானமாக என்னைக் காலோடு தலைவரை கவனித்துப் பார்த்தார்.

என்னால் தலை நிமிர்ந்து அவரைப் பார்க்கவே முடியவில்லை. முன்பின் பேசிப் பழக்கமில்லாத ஒரு மனிதருடன் ஒரு பெண் எப்படிப் பேசமுடியும்! அந்த மனிதர் கணவராகத்தான் இருக்கட்டுமே!

ரயில் ஓடிக் கொண்டிருந்தது. இருளைக் கிழித்துக் கொண்டு. செய்வது ஒன்



"என்டா! பள்ளிக்கூடத்திற்கு லேட்?"
" 'பள்ளிக்கூடம், மெதுவாகப் போ' என்று போர்டு போட்டிருந்தது ஸார். மெதுவாக வந்தேன். லேட் ஆயிடுத்து!"

னும் தோன்றாமல் மௌனமாக அசைவற்று என் இடத்தில் உட்கார்ந்திருந்தேன்.

"என்னைக் கல்யாணம் செய்து கொண்டதில் உனக்கு வருத்தமா!" என்று மெதுவாக எனக்கு மட்டும் கேட்கும்படி, கேட்டார். அப்பொழுது அவர் வார்த்தைகள் தீனக்குரலாக வெளி வந்தன. நான் இளையாள் என்பதை ஞாபகப்படுத்தும் தோரணையில் இருந்தது அது. அவர் குரலிலிருந்து அவர் உள்ளத்தில் நடந்த போரும் புயலும் நன்றாய்த் தெரிந்தன. நான் "இல்லை!" என்னும் மாதிரியில் தலையை மாத்திரம் அசைத்தேன்.

அவர் மறுபடி தொடர்ந்தார்:

"கொஞ்சம் சிரமந்தான்! என் மூத்த பையன் சந்துரு கொஞ்சம் பிடிவாதக்காரன். அவனிடம் மாத்திரம் நீ கொஞ்சம் ஜாக்கிரதையாய்ப் பழக வேண்டும், அவ்வளவுதான்!"

இப்பொழுது அவர் குரல் தாழ்ந்திருந்தது.

இப்பொழுதுதான் அவருக்குக் குழந்தைகள் கூட இருக்கிறார்கள் என்பது தெரிந்தது. ஆனால் எத்தனை குழந்தைகள் என்று கேட்க என்மனம் துடித்தது. ஆனால் அதை நான் எப்படிக் கேட்பது! அப்படி நான் கேட்டால் அவர் என்ன நினைத்துக் கொள்ளுவார்!

ஊருக்கு வந்ததும் அவருடைய கார் ஸ்டேஷனுக்கு வந்து காத்துக் கொண்டிருந்தது.

காரின் கதவைத் திறந்து, "கிரிஜா, உட்கார்" என்றார். உட்கார்ந்து கொண்டேன். கார் நகர்ந்தது. உடனே அவர், "என் அப்பா, கேசவா! பாப்பா இங்கே இருக்கிறாளா! பாட்டியின் வீட்டுக்குப் போய்விட்டாளா!" என்று டிரைவரைப் பார்த்துக் கேட்டார். அதற்கு டிரைவர், "இல்லை, எஜமான்! இங்கேதான் இருக்குதுங்க!" என்றான்.

இதிலிருந்து அவருக்கு ஒரு பெண் இருப்பதையும் நான் தெரிந்து கொண்டேன்.

"பாப்பாவைப் பற்றிக் கவலையில்லை, கிரிஜா! நீ சிரமமில்லாமல் பார்த்துக்கொள்ளலாம்!" என்றார் அவர் என்னைப் பார்த்துக் கொண்டே.

இதிலிருந்து அவர் மனம் படும் கவலை எனக்கு நன்றாய்த் தெரிந்தது.

கார் அவர் பங்களா வாசலில் வந்து நின்றது. அவர் இறங்கிக் கதவைத் திறந்தார். நானும் கீழே இறங்கினேன்.

அப்பொழுது உள்ளேயிருந்து ஏழு வயதுச் சிறுமி ஓடிவந்து, "அப்பா!" என்று அழைத்து அவர் கையைப் பிடித்துக் கொண்டாள். அவர் அவளை வாரியணைத்துக் கொண்டார். ஆம். அவள்தான் அவர் பெண் பாப்பா.

வேலைக்காரன் சாமான்களையெல்லாம் உள்ளே கொண்டுபோய் வைத்தான். உள்ளே யிருந்து ஒரு வயது முதிர்ந்த அம்மாள் வந்து, "வா, அம்மா! கூஜாவை இப்படிக் கொடு!" என்று சொல்லி என்னை உள்ளே அழைத்துச் சென்றாள்.

என் கவனமெல்லாம் அவர் மூத்த பிள்ளை சந்துருவைத் தேடுவதிலேயே இருந்தது. ஆனால் அவனை எங்கும் காணோம். ஒருவேளை பையனுக்கு அப்பாவிடம் நெருங்கவே பயமோ!

அவர் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு சாப்பிட வந்து உட்கார்ந்ததும், "சந்துரு, சந்துரு!" என்று பலமாகக் கூப்பிட்டார்.

சந்துருவைப் பார்க்கவேண்டும் என்னும் ஆவல் அதிகமாயிற்று. நான் மறைவிடத்திலிருந்து கவனித்தேன். பதில் சொல்லாமல் மாடியிலிருந்து ஒரு பையன் இறங்கி வந்தான். அவருக்குப் பக்கத்தில் போடப்பட்டிருந்த இலையில் வந்து உட்கார்ந்தான். அவன் குனிந்த தலை நிமிரவே இல்லை. நான் அவனை நன்றாய்க் கவனித்துப் பார்த்தேன். வயது பதினேழு, பதினெட்டு இருக்கும். நல்ல களையான முகம். கிராப் மயிர் முன் பக்கம் சுருண்டு இலேசாக முகத்தில் படிந்திருந்தது. அது அவனுக்கு அதிக அழகைத் தந்தது.

"என்ன, இன்றைக்குக் காலேஜ் இல்லையோ!" என்று அவர் கேட்டார்.

"இல்லை," என்று பதில் சொன்னான். அவன் தலை குனிந்தபடியே இருந்தது.

எனக்கு அவனைப் பார்க்கப் பார்க்க ஒரே ஆச்சரியமாயிருந்தது. 'இவனையா பிடிவாதக்காரன் என்று அவர் சொன்னார்!' என்று நினைத்து ஆச்சரியப்பட்டேன். அவர் அப்படிச் சொன்னதைக் கேட்டபோது நான் சந்துருவை ஒரு பத்து வயதுப் பையனாக மனக்குள் கற்பனை செய்து கொண்டேன். இங்கு வந்து பார்த்தால் முற்றிலும் வேறாக அல்லவா இருக்கிறது! நானும் அவனும் ஏறத்தாழச் சம வயதினராக இருப்போம். நான் அவனோடு எப்படிப் பழகுவது!

ஆனால் அவனை அப்புறம் அடிக்கடி வீட்டில் பார்க்க முடியவில்லை. அன்று பார்த்ததுதான்.

ஐந்து வருஷங்கள் சென்றன. என் கணவர் என்னிடம் மிகவும் அன்போடு பழகினார். ஒருநாள் கூட என்னைக் கடிந்து கொண்டது கிடையாது. சந்துரு மாத்திரம் கலாசாலை விடுமுறை நாட்களைத் தவிர மற்ற நாட்களில் பட்டணத்திலேயே இருந்து வந்தான். பி.ஏ., பரீக்ஷையில் அவன் முதன்மையாகத் தேறியதில் அவன் தகப்பனருக்கு உண்டான ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. தாராளமாக அவன் கேட்ட பணத்தை அனுப்பி வந்தார். அவன் மேல் படிப்புக்குச் சீமைக்குப் போக வேண்டும் என்றதைக்கூட மறுக்காமல் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விமான

நிலையத்துக்குப் போய் வழியனுப்பிவிட்டு வந்தார். வந்த பிறகு பித்துப் பிடித்தவர்போல் இருந்தார்.

என் கணவர் என் சம்பந்தப்பட்ட விஷயங்களைத்தான் என்னிடம் பேசுவார். என்னிடம் தப்பித் தவறிக்கூடச் சந்துருவைப் பற்றிய பேச்சையே அவர் எடுத்ததில்லை.

நான் என்ன அபராதம் செய்தேன்! எனக்கு அவனைப் பார்த்தது முதல் அவனுடைய புத்திசாலித்தனமான தோற்றத்தில்தான் சதா என் கவனம் முழுவதும் சென்றது. என்னதான் தகப்பனார் வேண்டியதைச் செய்தாலும், தான் ஊருக்குப் போகும்போது, தன்னைப் பற்றியும் தன் உடம்பைப் பற்றியும், கவலையுடன் கவனித்துக் கொள்ளும்படி சொல்லியனுப்பத் தாயார் ஒருத்தி தனக்கு இல்லையே என்னும் குறை சந்துருவுக்கு இருந்திருக்கலாம். இளம் வயதில் தனியாக அவ்வளவு தூரம் பிரயாணம் செய்ய வேண்டுமே என்று அவனைப் பற்றி அக்கறையோடு நான் என் கணவரை விசாரித்தேன்.

அதற்கு அவர் "நீ வேண்டுமானால் அவனுக்குத் தைரியம் சொல்!" என்றார்.

நானாக முன்பின் பேசாதவனுடன் எப்படி அவ்வளவு சொந்தமாய்ப் போய்ப் பேசுவது! அவன் மாத்திரம் என்னிடம் போய் வருகிறேன் என்று சொல்லியிருக்கக் கூடாதா!

சீந்துரு சீமையில் படித்தது அவருக்கு எவ்வளவோ பெருமையாயிருந்தது. ஒவ்வொரு வாரமும் அவனிடமிருந்து கடிதம் வந்தது.

ஒரு நாள் மாலை நான் மட்டும் வீட்டில் இருந்தேன். அவர் வெளியே போயிருந்தார். அப்பொழுது வேலைக்காரன் ஒருவன் வந்து சீமைத் தந்தி என்று ஒரு கவரைக் கொடுத்தான். சந்துருவுக்குத் திடீரென்று ஜுரம் கண்டிருப்பதாகவும் இப்பொழுது அதிகமாயிருப்பதாகவும் அவன் நண்பன் தந்தி கொடுத்திருந்தான். நான் அந்தத் தந்தியை அவர் மேஜை மீது வைத்தேன். அவர் சற்று நேரத்துக்கெல்லாம் வந்து பார்த்தார்; உடனே பதில் தந்தி எழுதி அனுப்பினார்.

நான் கவலை தோய்ந்த முகத்துடன் அவரைப் பார்த்தேன். அவர் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உள்ளே போனவர் வெளியே வரவில்லை. என்னிடம் அவராகவே இது சம்பந்தமாக ஏதாவது பேசுவார் என்று நான் எதிர்பார்த்தேன். அவர் பேசவேயில்லை. நானாகவும் அவரைக் கேட்கவில்லை. சந்துருவைப் பற்றி என்னிடம் அவர் எதுவும் பேச விருப்பமில்லையோ! மண வாழ்க்கையிலும் நான் தனிதானா!

இப்படி, சோகத்தோடு இரண்டு நாட்கள் சென்றன. மூன்றாம் நாள். ஐயோ! பொழுது விடியாமல் இருந்திருக்கக் கூடாதா!

மறுபடியும் தந்தி வந்தது. என் கணவர் கவலையுடன் அதை வாங்கியவர் பிரித்துப் பார்த்தவுடன், அப்படியே நாற்காலியில் சாய்ந்தார். நான் திகிலோடு தந்தியை எடுத்துப் பார்த்தேன். "சந்துரு இறந்தான்" என்று இருந்தது.

என் கணவர் மூர்ச்சை தெளிந்து எழுந்ததும் சந்துருவின் சடலத்தை விமான மூலம் இங்கு எடுத்து வர ஏற்பாடு செய்தார். எனக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. சந்துரு சுருண்ட தலைமயிருடன் என்னையே பார்த்துக் கொண்டு என் எதிரிலேயே நிற்பதுபோலிருந்தது.

அந்தத் துக்கத்துக்கு மத்தியில் என் மனதில் சந்துரு மட்டும் என் பிள்ளையாயிருந்திருக்கக் கூடாதா என்ற எண்ணம்தான் தோன்றியது.



"ஏண்டாப்பா! நீதான் டாக்டருக்குப் படிக்கிறயே...பாதி படிப்பும்தான் ஆயிடுத்தே...இவருக்கு ஏதாவது ஒரு நல்ல மருந்தாகப் பார்த்துச் சொல்லேன்."

"சொல்லேண்டாப்பா! எனக்கும் இப்போ பாதி உயிர்தானே இருக்கு!"



"என்னங்க! ரேடியோவை நிறுத்தச் சொல்றீங்களே! நம்ம அம்மா இப்போ பாடப் போறாங்களே!"

"அதுதானடா நிறுத்தச் சொல்றேன், இன்னைக்கு ஒரு நாளாவது அந்தத் தலைவேதனை இல்லாமல் இருக்கலாம் பாரு."

# தூக்கம் வரவில்லை!

மாலு

அன்று எனக்கு ஒரே அசதியாக இருந்தது. சற்று முன்னாலேயே படுத்தால்தான் நிம்மதியாக இருக்கும் போலிருந்தது. படுப்பதற்காகக் கிளம்பினேன். 'தட்! தட்!' என்று யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. மிகவும் அலுப்போடு சென்று கதவைத் திறந்தேன். என் நண்பர் கணபதி நின்று கொண்டிருந்தார். வேண்டா வெறுப்பாக "வாங்கோ ஸார், கணபதி! வாங்கோ!" என்று உள்ளே அழைத்து வந்தேன்.

"என்ன ஒருமாதிரி இருக்கிறீர்களே?" என்று கேட்டார் கணபதி.

"இரவு பகல் என்று ஓயாது வேலை. வேலைக்குத் தூக்கம் கிடையாது" என்றேன்.

"சரி படுப்போம். மற்ற காரியங்களைப் பொழுது விடிந்து பார்த்துக் கொண்டால் போகிறது" என்றார் நண்பர்.

எனக்கு ரொம்ப திருப்தியாக இருந்தது. சீக்கிரம் தூங்கலாமல்லவா?

உடனே என் நண்பருக்கு ஒரு படுக்கையை விரித்துவிட்டு அதற்குப் பக்கத்திலேயே படுக்கையைப் போட்டுப் படுத்தேன்.

கணபதியும் படுக்கையில் படுத்தார்.

தூக்கத்துக்கும் கணபதிக்கும் என்ன தொடர்போ தெரியவில்லை. மனுஷன் படுத்தாரோ அவ்வளவுதான். தூங்க ஆரம்பித்து விட்டார். அதற்கு அறிகுறியாகக் குறட்டையும் விட ஆரம்பித்து விட்டார். அடாடா! அந்தக் குறட்டையில்தான் எத்தனை விதச் சத்தங்கள். 'கர்...ர்...ர்' என்று எருமையின் குரல்போல ஒரு சத்தம். உடனே 'புஸ்...ஸ்...ஸ்' என்று துருத்தி பயங்கரமாக மூச்சுவிடுவது போல ஒரு அலறல். இப்படி 'கர்...ர்...ர்' 'புஸ்...ஸ்...ஸ்' என்று விதம் விதமான கோர சத்தங்கள். நடு நடுவே அந்தக் குறட்டைச் சத்தம் ஸ்வர ஜாலங்களும் புரிந்தன. நான் படுக்கையில் புரண்டு கொண்டே இருந்தேன்.

கணபதி நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தார். ஆங்கிலத்தில் சொல்லுவார்களே 'ஸௌண்ட் ஸ்லீப்' என்று அந்தத் தூக்கம் இந்தக் 'கர்...ர்...ர்' 'புர்...ர்...ர்' சத்தத் தூக்கந்தான் போலிருக்கிறது!

கடிகாரத்தில் மணி பத்தடித்தது. பதினொன்று அடித்தது. கடைசியில் 'டாண்! டாண்!' என்று பன்னிரண்டும் அடித்து ஓய்ந்தது. ஆனால் என் நண்பரின் குறட்டைச் சத்தம் மட்டும் ஓய்ந்தபாடாயில்லை. எனக்கும் தூக்கம் வந்தபாடாயில்லை.

என் படுக்கையைச் சுற்றிக்கொண்டு வெளி வராந்தாவுக்கு வந்தேன். நண்பரின் குறட்டைச் சத்தம் காதில் விழுகிறதா என்று காது கொடுத்துக் கவனித்துக் கேட்டேன். குறட்டையின் கீதம் காதில் விழவில்லை.

"அப்பாடா!" என்று ஒரு பெருமூச்சு விட்டுப் படுத்தேன்; தூங்கி விட்டேன்.

'சுள்'ளென்று காலைக் கதிரவனின் வெய்யில் என் முகத்தில் பட்டதும் தான் எழுந்திருந்தேன். நேரே நண்பர் கணபதி படுத்திருந்த இடத்துக்குப் போனேன். அவரைக் காணவில்லை, மணி ஏழாகி யிருந்தது. ஏழுமணி வரையில் தூங்கியும் எனக்குத் தூங்கியது போலவே இல்லை. அசதியாக இருந்தது.

கணபதி அதிகாலையிலேயே எழுந்து வெளியில் போயிருப்பாரோ என்று நினைத்துக் கொண்டு என் அறைக்குள் சென்றேன்.

நண்பர் கணபதி 'ஈஸி சேர்'ல் சாய்ந்து படுத்துக் கொண்டு கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தார். "என்ன கணபதி இன்று அதிகாலையிலேயே எழுந்துவிட்டாய் போலிருக்கிறதே" என்று கேட்டேன்.

"அதி காலையிலேயா? அர்த்த ஜாமத்திலேயே எழுந்து விட்டேன்" என்றார்.

"ஐயோ! பாவம்! தூக்கம் பிடிக்கவில்லையோ!" என்றேன்.

"ஆமாம்! தூக்கமே வரவில்லை!" என்றார்.

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. "என்னப்பா! முழுப் பூசனிக் காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாயே! படுக்கையில் படுப்பதற்குள் 'டக்' கென்று தூங்கி விட்டாயே! நான் அல்லவா தூக்கமே பிடிக்காமல் திண்டாடிவிட்டு வெளி வராந்தாவில் போய்ப் படுத்தேன்?" என்றேன்.

கணபதி ஏதாவது நினைத்துக் கொள்வாரோ என்று அவருடைய குறட்டைதான் எனக்குத் தூக்கம் வராததற்குக் காரணம் என்று சொல்லவில்லை.

"ஒரு மணி வரை நான் நன்றாகத் தூங்கினேன்" என்று கணபதி ஆரம்பித்தார்.

"அப்புறம்" என்றேன்.

"ஏதோ பிறாண்டுவது போலவும் ஊளையிடுவது போலவும் சத்தம் கேட்டது. திடுக்கென்று விழித்துக் கொண்டேன். பக்கத்தில் உன்னையும் காணவில்லை. ஆனால் அந்த ஊளையிடும் அழுகுரல் போன்ற சத்தம் மட்டும் தொடர்ந்து கேட்டது. சத்தம் வந்த திக்கை நோக்கிப் போனேன், நீதான் அந்த மாதிரி 'கர்...புர்' என்று குறட்டை விட்டுக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தாய். எங்கெங்கேயோ படுக்கையைத் தூக்கிக் கொண்டு போய்ப் போட்டுப் படுத்துப் பார்த்தேன். அங்கும் உன் குறட்டைச் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தது. எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. இரவு பூராவும் 'ஈஸிசேர்'ல் சாய்ந்தபடியே இருந்தேன்" என்றார் கணபதி.

எனக்குத் தலையைக் 'கிர்' என்று சுற்றியது. கணபதியின் முகத்தை நிமிர்ந்து பார்க்கவே எனக்கு வெட்கமாயிருந்தது!

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 53. ஆசனம் செய்வோம் வாருங்கள்!

சர்வாங்காசனம் பெண்மணிகளுக்கு ஒரு வரப்பிரசாதம் போன்றது!

ஆம். இது ஒரு வரப்பிரசாதம்தான். மருந்துகளையே நம்பி வாழும் சகோதரிகளுக்கு இந்த சர்வாங்காசனம் தான் விமோசனம் அளிக்க வல்லது. பெண் குலத்திற்கு ஏற்படும் எல்லா நோய்களையும் சர்வாங்காசனம் ஒன்றே நிவர்த்திக்கும் சக்தி வல்லது.

பெண்களுக்கு இயற்கையாய் அமைந்திருக்கும் தாய்மை மிகவும் போற்றக் கூடியது. அந்த நிலைமையிலுள்ள பெண்கள் பல இன்னல்களுக்கும் நோய்களுக்கும் கலபமாய் ஆளாய் விடுகின்றனர். ஒவ்வொரு பிரசவத்தின் போதும் ரத்தமெல்லாம் இழந்து விடுவதால் அப்பொழுது தைராய்ட் பலவீனமாய் விடுகிறது. அப்படி பலவீனமான தைராய்ட் சிலருக்கு அப்படியே நிருந்து, பல வியாதிகளுக்கு அதுவே காரணமாகவும் அமைகிறது. நல்ல பசி இன்மை, அஜீரணம், உடல் மெலிவு, குழந்தைக்குப் பால் இல்லாமை, நரம்பு பலஹீனம், ரத்தமின்மை, மயக்கம், தலைவலி, சோர்வு இன்னும் பல ஏற்படுகின்றன.

இதற்குப் பரிகாரமாகப் பல ஊசிகள், டானிக்குகள், மருந்துகள் மலிந்து கிடக்கின்றன. அத்தனையும் உபயோகித்தும் பல சகோதரிகள் அப்படியே இருக்கின்றனர். சிலர் மேலும் மேலும் பலவீன மடைந்து கொண்டே போகிறார்கள். அப்படிப்பட்டவர்களெல்லாம் சர்வாங்காசனம் செய்தார்களேயானால் வியாதிகளின் தொல்லைகளிலிருந்து விடுதலை பெறலாம். ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்குத் தைராய்ட் கோளம் நன்றாய் இருக்க வேண்டியது மிக முக்கியம். அதனுடைய ஆரோக்கியத்தைப் பொறுத்தே பெண்களின் வாழ்க்கை அமைகிறது. வீட்டு விலக்காதல், பிரசவித்தல், குழந்தைக்குப் பால் கொடுத்தல் முதற்கொண்டு சகலமும் தைராய்டின் துணையுடன்தான் நடக்க வேண்டியிருக்கிறது. தைராய்டின் சுகம் கெட்டால், சகல சுகங்களும் கெடும். ஆகவே என்றும் சுகமாக, ஆரோக்கியமாக, அழகாக, அமைதியாக இருக்கச் சர்வாங்காசனமே நல்லது. எல்லாம் துறந்த துறவிகள் யோகிகள் மாத்திரம் செய்யவேண்டுமென்பதில்லை. அப்படி அது அவர்களுக்கே உரிமையென்றால் இங்கு எடுத்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை. இல்லறத்தில் இருந்துகொண்டே, குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொண்டே, கணவன், குழந்தைகள், பந்துக்களுடன் வாழ்ந்து கொண்டே சர்வாங்காசனம் செய்யலாம். இன்பமாய், சுகமாய், ஆனந்தமாய் இருக்கலாம். நோயற்ற வாழ்வே, குறைவற்ற செல்வம் என்ற முதியோர் வாக்கின்படி வாழலாம்.

அதற்காகக் காசு பணம் செலவில்லை. தனியாகப் பயிற்சிக் கருவிகளை வாங்கத் தேடி அலைய வேண்டியதில்லை. மிக எளிய ஏழைக்குடும்ப ஸ்திரீகள் முதல், பணக்கார ஸ்திரீகள் வரை எல்லோரும் செய்து ஆரோக்கியமாய் இருக்கலாம். எந்த வயதினரும் செய்யலாம். ஐந்து முதல் அறுபது வயதுள்ளவர்களும் இந்த சர்வாங்காசனம் செய்யலாம். எவ்வளவு வேலைகளுள்ள பெண்களாய் இருந்தாலும் பதினைந்து, இருபது நிமிஷங்கள் ஓய்வு கிடைப்பது அரிதல்ல. மனது வைத்தால் எல்லாம் இடம் கொடுக்கும். என்னதான் குழந்தைகள், குடும்பத் தொல்லைகள் இருந்தாலும், காலையில் பதினைந்து, இருபது நிமிஷங்கள் அதற்கென்று ஒதுக்கி வைக்கலாம். ''காலையிலா, அது நடக்காத காரியம். வீட்டில் அப்பொழுதுதானே வேலை அதிகம்' எனலாம். ஆனால் அவர்களுக்கு உண்மையில் ஊக்கம் இருக்குமானால் சாதாரணமாய்ப் படுக்கையை விட்டு எழுந்திருக்கும் நேரத்தைவிட சற்று அரைமணி நேரத்திற்கு முன்னால் எழுந்து விட்டால் நேரம் கிடைத்து விடுகிறது. அப்படி அரை மணி நேரம் தூக்கம் கெடுவதினால் ஒன்றும் நேர்ந்து விடாது. ஆசனம்தான் செய்கிறோமே! எல்லாம் சரியாய் விடும். பழக்கமாகி விட்டால் ஒரு நாள் செய்யாவிட்டாலும் குறைவு போலத் தென்படும். செய்து பார்த்து அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும் அதன் மகிமை.



ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி குமாரசாமி

வயது அதிகம் ஆன ஸ்திரீகளும் சர்வாங்காசனம் செய்யலாம். 40, 50, 60 வயதானவர்களும் செய்தால், உடலில் நோய்களே அணுகாது. வீட்டிலுள்ள வேலைகளுக்கு நன்கு

உதவலாம். ஆத்ம சிந்தனையையும் தூண்டிவிடக் கூடியது இந்த சர்வாங்காசனம். எந்தக் காரியம் சாதிக்க வேண்டுமானாலும் இந்த உடலால்தான் சாதிக்க வேண்டியிருக்கிறது. உடல் உறுதியில்லையென்றால் எந்தக் காரியமும் செய்ய முடியாது. மனதும் வராது. உயர் நோக்கங்கள், உயர் கருத்துக்கள், செய்கைகள் எல்லாம் அவரவர்களின் உடல் நிலைமையைப் பொறுத்துத்தான் அமையும். ஆகையால் சகோதரிகளே, இன்றே விழியுங்கள். ஒரு முடிவுக்கு வாருங்கள். பெண்மணிகள் மனது வைத்தால் ஆகாத காரியம் ஒன்றுமில்லை. 'சர்வாங்காசனம் தினமும் பதினைந்து நிமிஷங்களாவது செய்வேன்' என்று பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளுங்கள். அன்றே உங்களுக்கு விமோசனம் கிடைத்தமாதிரி.

நாலு பெண்கள் சந்திக்கும் இடங்களில் புடவைகளைப் பற்றியும், நகைகளைப் பற்றியும் பேச்சு நடக்கும் என்று சொல்வர். ஆனால் அத்துடன் தங்களுக்கு வந்த வியாதிகளைப் பற்றியும் பேசிக் கொள்வர் என்பதையும் சேர்க்க வேண்டியதாய் இருக்கிறது. அக்கூட்டத்தில் அவரவர்களுக்கு வந்த வியாதிகளின் பிரதாபம், பெரிய பெரிய டாக்டர்கள் வந்து பார்த்த பெருமைகள் எல்லாம் அடிபடும். யாருக்குப் பெரிய சிக்கலான வியாதிகள் வந்திருக்கிறதோ, அந்தம்மாள் பக்கம் தான் அனுதாபம் அதிகம் இருக்கும். அந்தம்மாள் தான் அன்றையக் கூட்டத்தில் கௌரவிக்கத் தகுந்தவராகக் கருதப்படுவார். ஏதோ லேசாய் வியாதி வந்தவருக்கோ, ஒன்றுமே வாராதவர்களுக்கோ சொல்லிக் கொள்வதற்கு ஒன்றும் இருக்காது. முகத்தில் அசடு தட்ட அவர்களுடன் இருக்க வேண்டியதுதான். அவருக்குத்தான் உயர்ந்த வியாதிகள் வரவில்லையே பெருமைப்பட! என்ன செய்வார்! ''ஏதாவது ஒரு பெரிய, உயர்ந்த வியாதியாய் வரக்கூடாதா! நாம் பெருமைப்படலாமே! நாலு பேர் நமக்கும் அனுதாபப்படுவார்களே!'' என்று அந்தச் சமயம் தோன்றும். நாகரிகம் அப்படி வளர்ந்து விட்டிருக்கிறது. வியாதியைச் சொல்லிப் பெருமைப்படும் நாளாக இருக்கின்றது. ஆனால் பெரிய, பெரிய வியாதி வந்தது என்று சொல்வதால் மட்டும் பெருமை கிட்டுவதில்லை. ஊரிலுள்ள பிரபல டாக்டர்கள் வந்து பார்த்தார்கள் என்று சொல்லுவதில்தான் பெருமை மிளிரும். சாதாரண நாட்டு முறைகளைக் கையாண்டிருந்தாலும் சொல்ல மாட்டார்கள். என்னே! நாகரிகம் வளர்ந்திருக்கும் பெருமை!



ஐந்து வயதுப் பெண் தலையணையின் உதவியுடன் சர்வாங்காசனம் பழகுகிறாள்!

இம்மாதிரி மனப்பான்மை நம்மிடமிருந்து ஒழிய வேண்டும். நமது சாஸ்திரம், நமது கலைக்காகப் பெருமையடைய வேண்டும். பல்லாயிர வருடங்களுக்கு முன்பே நமது பெரியோர்கள் இந்த ஆசனங்களை நமக்கு அழியாப் பொக்கிஷங்களாக வைத்துச் சென்றிருக்கின்றனர். அதைப் பழமையில் நம்பிக்கைகொண்ட சில சன்னியாசிகள், துறவிகள், யோகிகள் விடாமல் பயிற்சி செய்து வந்தார்கள். அதனாலேயே ஆசனங்கள் என்றால் அப்பேர்ப்பட்டவர்கள்தான் செய்ய லாயக்கானது என்று ஜனங்கள் நினைத்திருந்தனர். ஆண்களே அப்படி நினைத்தால் பெண்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்! ஆகவே அந்த மனப்பான்மையைப் போக்கி இப்பொழுது ஆண், பெண் எல்லோரும் செய்யலாம் என்ற மனப்பான்மை அடைந்து வருகிறார்கள். அதிலும் நோய்களுக்கு மருந்தை உபயோகிப்பது என்று ஒரு மனப்பான்மை அநேக வருடங்களாய் வேரூன்றி விட்டிருக்கிறது. இப்பொழுதுதான் இயற்கை முறையாகிய ஆசன சிகிச்சை மூலம் தீராத பல வியாதிகளைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று சற்றுத் தெரிந்து கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். ஆகையால் இதுவே தருணம். எல்லோரும் ஆசனம் செய்து ஆரோக்கியமாக இருப்போம், வாருங்கள்.

(தொடரும்)



''அடேயப்பா, நீ இவ்வளவு புத்தகங்கள் வைத்திருக்கிறாயே! இவைகளையெல்லாம் ஒரு பீரோவில் வைத்தால் என்ன?''.

''வைக்கலாம், அப்பா, வைக்கலாம்! ஆனால் பீரோ யாரும் கடன் தரமாட்டேன் என்கிறார்களே!''



"வாங்க மிகச் சிறந்தவை
Platignum"
MADE IN ENGLAND
பிளாட்டினம்
பேனாக்கள் பால்பாயிண்டுகள்


LAS (B)


இந்தியாவின் தலைசிறந்த
சைக்கிள் டயர்
சூப்பர்
இந்தியா
சிவப்பு வளையத்தைக் கவனித்து வாங்கவும்


எங்களது வருஷாந்திர விடுமுறைக்காக சில புது உடைகள் தைக்கப்பட வேண்டியிருந்தன; ஆனால் பணம் தான் எங்கு என்று தெரியவில்லை. பின்பு என் சினேகிதி தன் ஸிங்கரை உதவினாள். சில வாரங்களிலேயே நான் எங்கள் உடைகளைத் தைத்து விட்டேன். இப்போது நானே சொந்தத்தில் ஒரு ஸிங்கரை வைத்திருக்கிறேன் என்று சொல்லத் தேவையில்லை.
ஸிங்கர் தையல் மிஷின்கள் தங்கள் பிரசித்தி பெற்ற சிவப்பு "S" ஆல் அடையாளமிடப்பட்ட ஸிங்கர் ஷாப்புகளில் விற்கப்படுகின்றன. இங்கே நீங்கள் உண்மையான ஸிங்கர் பாகங்கள், விநியோகங்கள், ஆலோசனைகள், கைதேர்ந்த பயிற்சி பெற்ற ஸிங்கர் ஆட்களால் ரிப்பேர்கள் முதலியவைகளைப் பெறமுடியும்.
எனக்கும் என் குழந்தைகளுக்கும் புதிய துணிமணிகளைப் பற்றிக் கனவு கண்டேன்:
பின் அதை ஸிங்கரால் தயார் செய்தேன்
LAS

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens' Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

